egistered No. M. 2330

'SIDDHANTHAM
Vol. 30—No. 8

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'



மலர் 30 | ஹேவிளம்பி ஆவணி 1957 ஆகஸ்ட் | இதழ் 8

உள்ளுறை — பக்கம்



பத்திராசிரியர் : C. M. இராமச்சந்திரன் செட்டியார், பி.ஏ., பி.எல்.

உதவிப் பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

## சமாஜச் செய்தி

2—8—57, வெள்ளிக்கிழமை மாலை 7-30 மணிக்கு, சுந்தரர் விழா சமாஜத்தின் சார்பில் கபாலீச்சுரத்தில் நடைபெற்றது. சமாஜப் பெரியார் இராவ் சாயிப் நல். முருகேச முதலியார், பி.ஏ. அவர்கள் தலைமைதாங்கினார்கள். முன்னுரையில் அவர்கள், சுந்தரர் திருஒற்றியூர் எல்லையைக் கடந்தபோது தாம் சத்தியம் செய்துகொடுத்த வாக்கு தவறியதால் பார்வை மறையப் பெற்ற இடம் புதுப்பிக்கப்படவேண்டு மென்றும், ஞாயிறு என்ற கிராமத்தில் சங்கிலியார் வாழ்ந்த மனை ஒருநல்ல முகம்மதியஅன்பர் கைவசத்திலிருப்பதாகவும், அந்த அவர் விலைக்குக் கொடுத்துவிட இணங்குவதாகவும், எனவே சைவப் பெரு மக்கள் தம் வசம் பெற்று ஆங்கோர் மடம் அமைக்கவேண்டுமென்றும் கூறினார்கள். பிறகு புலவர் முருகவேள், தமிழர் பண்டைக் காலம் தொடங்கிக் கையாண்டு வந்த தவநெறி இனையதென விளக்கிச் சுந்தரர் ' விழுத்தவ வேந்தர் ' என்பதை எழாந் திருமுறை அகச் சான்று கொண்டும், பெரியபுராணச் சான்றுகொண்டும் நன்கு விளக்கினார்கள். திருவாளர் ச. சச்சிதானந்தம்பிள்ளை அவர்கள், "சத்தியம் தவறுதல் மன்னிக்கமுடியாத குற்றம்" என்பதை விளக்கவே சுந்தர மூர்த்தி சுவாமிகளைச் சத்தியம் செய்துகொடுக்கும்படியாகச் செய்து, அவ்வாக்கை மீறிய காலத்துப் பார்வையைப் போக்கி மீண்டும் இறைவன் கண்கொடுத்தார் என்று கூறி இவ்வுண்மை உலக முழுவதும் பரவவேண்டுமென்றும் கூறினார்கள். இல்லற வாழ்க்கையில் வாழ் வாங்கு வாழ்ந்து அடையவேண்டிய முத்திப்பேற்றையும் பெறலாம் என்ற உண்மையும் சுந்தரர் வரலாற்றினின்று பெறப்படுகிறது என்று கூறினார்கள்.

செயலாளர் நன்றியறிதலை முடிவில் தெரிவித்துக்கொண்ட போது, இறைவனுடைய எண் குணத்துள் ' தூயஉடம்பினனாதல் ' என்ற அடைவே தவநெறியின் சிறந்த பயனாகும் என்பதும், ' பகைமை ' எவ்வாற்றானும் சைவர்களுக்கு முக்கியமாகவும் மக்களுக்குப் பொதுவாகவும் கூடாது என்பதும், சுந்தரர் வாழ்க்கையில் பெறக் கூடிய சிறந்த உண்மைகள் என்று தெரிவித்துக்கொண்டனர். விழா இனிது முடிந்தது.

## விண்ணப்பம்

உயர்திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் 23-6-57 பெங்களூரிலிருந்து சென்னைக்குத் திரும்பி வந்த நாள் முதலாக உடல்நலமின்றி இருந்துவருகிறார்கள். எனினும் சமாஜ விஷயமாகத் தனக்கு வரும் கடிதங்களுக்குச் செயலாளர் மூலம் ஆவன செய்யவும்,

Reg. M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

மலர் 30 | ஹேவிளம்பி ஆவணி 1957 ஆகஸ்ட் | இதழ் 8

## தலைவர் பேருரை*

" நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்ப னவர்தமை நாணியே "

மெய்யன்பர்காள்! சிவநேயச் செல்வர்காள்!

எல்லாருக்கும் என் அன்பார்ந்த வணக்கம். இந்தச் சித்தாந்த சபைக்கு நான் புதியவன் அல்ல. பல ஆண்டுகளாகப் பேச்சுக்கள் நிகழ்த்தியும் இரண்டு முறை தலைமை வகித்தும் இருக்கின்றேன். இன்று மூன்றாம் தடவையாகத் தலைமை வகிக்கும் கடமையை எனக்குத் தந்திருக்கிறீர்கள். என்மீது வைத்திருக்கும் பேரன்பினாலே மீண்டும் என்னை அழைத்திருக்கிறீர்கள். அதற்கு எழுத்தறியாத அன்பாலும் பேச்சறியாத நெஞ்சாலும் நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றேன். இந்தச் சித்தாந்த சபை தமிழ் நாட்டிலேயே மிகப் பழமையான சபை. இச்சபை செய்து வரும் திருத்தொண்டு அளவு கடந்தது. தமிழ் நாட்டில் உள்ள ஏனைய சபைகள் எல்லாம் இதற்குப்பின் தோன்றியவையே. அவைகள் எல்லாம் இதன் அரிய செயல்களை

---

*தூத்துக்குடி, சைவ சித்தாந்த சபையின் 73-வது ஆண்டுவிழாவில் திரு. C. M. இராமசந்திரன் செட்டியார் பி.ஏ.,பி.எல். அவர்கள் (தலைவர், தமிழ்க்கல்லூரி, பேரூர்) நிகழ்த்திய தலைமைப் பேருரை.

பின்பற்றுபவையே ஆகும். இதற்குப்பின் தோன்றிய பல சபைகள் தொடக்கத்திலே ஊக்கம்கொண்டு பணிசெய்து நாளாவட்டத்தில் மறைந்தும் போயின. அவைகள் நாய்க் குடையின் வாழ்க்கையை ஒத்தனவாயின. ஆனல், இந்தச் சபையோ சிறிதேனும் ஊக்கம் குன்ருமல் நாளுக்கு நாள் வளர்ந்து நாட்டிற்கும், சமயத்திற்கும், மொழிக்கும் சிறந்த தொண்டு புரிந்துகொண்டு வருகிறது. இதற்கெல்லாம் காரணம் இதனை நன்கு நடத்திவரும் சைவப் பெரியார் களின் குன்ருத ஊக்கமேயாகும். சிறப்பாகச் சித்தாந்தப் பேராசிரியர், சிவத்திரு. சிவகுருநாத பிள்ளையவர்கள் தம் வாழ்நாள் முழுமையுமே இச்சபைக்கென்று அர்ப்பணம் செய்து தற்போது எம்பெருமான் திருவடியில் கலந்து கொண்டு தம் இடையரு ஆசியை வான் மூலம் மழைத் துளிகள்போல் பொழிந்துகொண்டு வீற்றிருக்கின்றனர். அன்னருடைய ஆசியே இச்சபை மேன்மேலும் வளரு வதற்கு ஊற்றம் தந்துகொண்டிருக்கிறது. மற்றும், செயற்குழுவிற்குப் பல ஆண்டுகள் தலைமைவகித்துப் பொரு ளாலும் கருத்தாலும் நடாத்தி வந்த புகழ்பெற்ற சி வ. அவர்கள், ஆசிரியர் அவர்கள் போலவே திருவடி நிழல் அடைந்தும் அங்கிருந்து ஆசி செலுத்தி வருகின்ருர். தற்போது, அவர் திருக் குமாரனர் அவர் நல் ஊழியத் தையே பின்பற்றி இச்சபையை நடத்திவருகின்ருர். அவ ருடைய பேராதரவினல் இச்சபையானது தன் கடமை யைச் சிறந்த வகையில் செய்துகொண்டு வருகிறது. இவர் களேயன்றி இன்னும் கணக்கற்ற திருத்தொண்டர்கள் இச்சபையைச் சீராக வளர்த்துவரும் பணியில் ஈடுபட்டிருக் கிருர்கள். சென்ற 72 ஆண்டுகளாக மகாநாடுகள் கூட்டி அரிய பெரிய அறிஞர்களைத் தருவித்தும் சிறந்த சொற் பொழிவுகளை நிகழ்த்துவித்தும் சைவ சித்தாந்தத்தைப் பெருக்கி வருகிருர்கள். மேலும், பல அரிய நூல்களை இயற்றி இலவசமாகத் தந்தும் இருக்கிருர்கள். பள்ளிச் சிறுவர்கட்கு எளிதான சமயப் பாடங்களைக் கற்பித்து அன்னர்களைச் சைவ மக்களாக்கி வருகிருர்கள். இத்தகைய சிறந்த செய்கைகளினல் தூத்துக்குடி என்ற பெயர் கேட்ட அளவிலேயே சைவத்திற்கு உறைவிடம் என்ற எண்ணம் எவர்க்கும் தோன்றுவது ஒரு வியப்பு அல்ல. ஆகவே,

இப்படிப்பட்ட சபையில் பங்கெடுத்துக்கொள்வதென்றால் மகிழ்ச்சிதரும் ஒரு செயல் என்று யான் எண்ணுகிறேன்.

**நமது நாட்டின் தற்கால நிலை:** தற்கால உலகப் போக்கை நாம் அறிவோம். மக்கள் பெருமையடையப் பொருளைச் சேர்ப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள். அந்த வகையில் இயற்கைச் சக்திகளை நன்கு கணித்துச் செயற்கைக் கருவிகளை உண்டுபண்ணி அவைகளைக்கொண்டு பிறரை அச்சுறுத்தியும் அடக்கி ஆளவும் எண்ணுகிறார்கள். இதுதான் தற்காலக் கல்வியின் பயன் என்று அறியவேண்டும். தாங்கள் வலியவர்கள் என்று எடுத்துக்காட்டிப் பிறரைப் பயமுறுத்துவதனாலேயே மேன்மையடைய முடியும் என்ற கருத்தே உலகில் ஓங்கி நிற்கின்றது. இது அமைதிக்கு ஏற்ற முறையா என்று சிந்திக்க வேண்டும். பண்புடைய ஆசிரியர்கள், சிறப்பாகத் திருவள்ளுவனார் எடுத்துரைத்த நோக்கத்திற்கு முழுதும் மாறாக இது இருக்கின்றது. கடவுட் கொள்கை மறுக்கப் பட்டு வருகின்றது. மனிதனுடைய அறிவே எப்படிப்பட்ட செயலையும் செய்ய முடியும் என்பது தற்போதைய எண்ணப்போக்கு. "உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ" என்ற பட்டினத்தடிகள் கொள்கை வேரூன்றிக் கிடக்கின்றது. அக்கொள்கை சமய நிலையில் உரைக்கப் பட்டது என்றறியாமல் பொருள் பெறும் வழிகளில் பயன் படுத்துகின்றனர். 'கல்வியால் ஆன பயன் வாலறிவன் நற்றாள் தொழால்' என்ற வள்ளுவனார் கொள்கை மண்ணுள் புதைக்கப்பட்டது. நம் நாட்டுப் பழங்கதைகளில் இப்படிப்பட்ட நாட்டின் நிலைமை அவுணர்களும் அரக்கர்களும் மேம்பாட்டில் நிலைத்திருந்தபோது ஏற்பட்டதாகும். ஆனால் அன்னார்கள் அடைந்த கதி என்னவாயிற்றென்று அறிவோம். விஞ்ஞான ஆற்றலைக்கொண்டு காலத்தையும், இடத்தையும், கடினத்தையும் வெல்லலாம் என்ற நோக்கம் இறுதியில் பயனற்று ஆவியாய்ப் புகைந்து மறையும் என்று அக்கதைகள் நிரூபித்தன. அப்படி இருந்தும் இக்காலத்தில் உலக விஞ்ஞானத்தால் தழுவப்பட்ட செல்வ நாட்டார்கள் அப்பண்டைய நோக்கத்தையே முற்கொண்டு வலிமை பெற முயலுகிறார்கள். இதன் முடிவு எதிர்பாராத வகையில் தோல்விதான் அடையும். செல்வனைக் கண்டால்

வறியவனுக்கு அழுக்காறு ஏற்படுவது இயல்பு. தனி மனிதனுக்கே யன்றித் தொகுப்பு நாடுகளிலும்கூட இம் முடிவேதான் தோன்றும். மேல் நாடுகளில் தற்போது தோன்றி இருக்கும் பூசல்களுக்கு யாது காரணம் என்று நாம் செவ்வனே அறிவோம். அமைதியை நிலை நிறுத்த வல்லமை வேண்டும் என்ற கொள்கை நிலைக்காது. அமைதியை நிறுத்தப் பயங்கரத்தால் முடியாது; அன்பால் தான் முடியும் என்று சமயப் பெரியார்கள் கூறியுள் ளார்கள். அப்பெரியார்கள் தந்த சமயத்தைப் பின்பற்றும் மேற்கு நாட்டார்கள் பெயரளவில் பின்பற்றுகிறார்களே தவிர உண்மையில் அல்ல. நமது நாட்டவரும் மேல் நாட் டார்களைப் பின்பற்றி நாட்டின் ஆட்சி சமயப்பற்றில்லாதது என்று கூறியும், எழுதியும் வருகின்றார்கள். உண்மையில் சமயத்தில் தற்போது அரசியலார் புகுந்து அதனைத் துன் புறுத்தும் செயல்களைப் போல, முன்னர் நாம் அடிமை களாக இருந்தபோதும் நடைபெறவில்லை. ஊன்றிப் பார்த் தால் இதன் உண்மை நன்கு தெரியும்.

**சமயப்பற்றின்மை எங்கே?** சட்டத்தில் சமயப்பற் றில்லாத அரசியலை நடத்துகிறோம் என்று வாய்ப் பறை யடிக்கும் தற்கால அரசியல் பெரியார்கள், சென்னை முத லிய சில பிராந்தியங்களில் இந்துக்களுடைய சமய இடங்களை மட்டும் தங்கள் ஆளுகைக்குள் வைத்துக் கொண்டு, அவைகளிலிருந்து வருவாய்களைத் தங்கள் பொறுப்பில் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். இது ஒரு வகையில் நன்மையும் பல வகையில் தீமையும் விளைக்கின் றது. சமயப்பற்று இல்லை என்றால் எல்லா சமய நிலையங் களையும் சமமாகப் பாவித்துத் தங்கள் பொறுப்பில் வருவாய்களை எடுத்துக்கொள்ளவேண்டும். இந்துசமய நிலை யங்களுக்கு ஆதரவு தரும் நிலையில் பொறுப்பை எடுத்துக் கொண்டால் இந்து சமயிகள் மட்டும் தாங்களாகவே ஆட்சி புரிந்துகொள்ள இயலாத குழவிப் பருவத்தினரா? (மைனர்) ஏனைய சமயிகள் தாங்களாகவே ஆட்சி செய்து கொள்ளும் பெருமை பெற்றிருக்கிறார்களா? ஆட்சிபுரிய ஆற்றலற்ற அடிமையினர் எனப் பட்டம் பெறுவதில் ஒரு விதத்தில் எளிமை ஏற்பட்ட போதிலும் அதைவிட இழி வான நிலை பண்பாடுள்ள மக்களுக்கு வேறு வேண்டிய

தில்லை. ஆப்பிரிக்காக் கண்டத்துக் காட்டுமிராண்டிகளைப் போல் இந்து மக்களை நடத்துவது சரியா? இனி, இந்த ஆட்சியில் ஏற்படும் தீமைகளில் சில கூறுவோம்.

இந்து சமய நிலையங்களை ஏற்படுத்தின அறத்தாபனர்களின் நோக்கங்கள் நிறைவேற்றப்படுவதில்லை. சமயச் செயல்களுக்கென ஒதுக்கி வைத்த பணங்கள் மிகுதியானல் சமயச் சார்பற்ற வேலைகளுக்குப் பயன்படுத்துகிருர்கள். அவ்வேலைகள் சிறப்புற்றவைகளாக இருந்தபோதிலும் பண்டைய நோக்கத்திற்கு எதிரானவைகள். மேலும், பிற சமயிகளுக்கும் பயன்படுத்தப்படுகின்றன. எத்தனை தாராள சிந்தனை இருந்தபோதிலும் அச்செய்கை முறையாகாது. பிற சமயிகளுடைய உபரிப் பொருள்களை நமது சமயத்திற்குப் பயன்படுத்தவேண்டுமென்ருல் ஒத்துக்கொள்வார்களா? கடைத் தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைக்கும் நிலையில் இவ்வரசியல் நோக்கம் முடிவாகின்றது.

இந்து நிலையங்களின் வருவாய்கள் ஒரே அளவு கொண்டதாக இல்லை. சில நிலையங்கள் உபரி வருமானமும் சில நிலையங்கள் போதாத வருவாயும்கொண்டிருக்கின்றன. ஒன்றிலிருந்து ஒன்றுக்கு உதவி செய்யும் முறையே சரியானது. கணக்கற்ற கோயில்கள் பழுது பார்க்கப்படாமல் பாழ் அடையும் தருவாயில் இருக்கின்றன. அவைகளுக்கு வேண்டிய உதவி புரிவது சமயப் பகுதியாரின் கடமை. தற்போதுதான் இந்தக் கடமையை உணர்ந்து தற்போதைய கண்காணிப்பாளர் இதற்கு ஆதரவு அளித்து வருகின்ருர். அது மெச்சத்தக்கதே. அந்த ஆதரவு மிகுதியும் போற்றப்படவேண்டும். கூடியவரையில் உலகிய செலவுகளுக்குப் பயன்படுத்துவதை நிறுத்தி சமய நிலையங்களை மேன்மைப்படுத்துவதில் முயற்சிப்பதே நன்று.

இந்து சமயத்தார்கள் வாயில்லாப் பூச்சிகள் என்று எண்ணி மத்திய அரசியலார்கள் பலவகைகளில் வேறு செலவுகளுக்கும் வேறு சமயிகளுக்கும் பயன்படுத்த முயல்வது சரியன்று. அண்மையிலே ஒன்றிரண்டு வெறுக்கத்தக்க செலவுகளும் செய்யப்பட்டன. இந்து சமயப்பெரியார்களின் அனுமதியின்றி இப்படிப்பட்ட செயல்கள்செய்வது சரியல்ல. இதுமட்டுமோ? சைவ வைணவச் சமய குரவர்

களின் திருநாள்களைப் பாராட்டுதல் நமது கடமை. அப்படி இருக்க, பரோபகாரச் சிந்தனை மிகுதியாக வனுக்கப்பெற்ற அரசியலார்கள் புத்தருடைய திருநாள்களுக்கு மிகுந்த ஆதரவளிக்கிறார்கள். அதில் ஒரு பகுதியேனும் நமது குரவர்களின் திருநாட்களுக்கு அளித்தால் நன்றாக இருக்கும். அரசியல் தந்திரமாகப் புத்த சமய நாடுகளைத் திருப்திசெய்ய இவ்வாறு செய்கிறார்கள் போலும்.

இதைப்போல இன்னும் கணக்கற்ற செயல்கள் நடந்துவருகின்றன. அவைகள் நமது சமயங்களுக்கு எதிரிடையாக அமைகின்றன. அவைகளைக் கூடிய மட்டும் நிறுத்தி நமது சமயம் நல்ல நிலையில் இருக்கத்தக்க முறைகளைத் தேடிக்கொள்வதே நமது கடமையாய் இருக்க வேண்டும்.

**நமது சமய நிலையங்களின் நோக்கங்கள் :** நமது சமய நிலையங்கள் ஒரு காலத்தில் ஒருவரால் ஏற்பட்டவை அல்ல. பல ஆயிரம் ஆண்டுகளாக வளர்ச்சி முறையில் அவைகள் தோன்றிப் பெருகின. சமயங்களும் அவ்வாறே தோன்றின. நிலையங்களும் அதுபோலத்தான். ஆகவே, அவைகளின் நோக்கங்களும் அவைகளுக்கு ஏற்றபடி யமையும். சமய நிலையங்களில் சிறப்புற்றவை கோயில்கள். அடுத்த படியில் உள்ளவை மடாலயங்கள். அதற்கடுத்தபடி சமய சமுதாயங்கள். வேறு நாட்டுச் சமயங்களைப்போல அல்லாமல் நமது நாட்டுச் சமயங்கள் சோபான முறையில், அதாவது படிப்படியாக வளரும் முறையில், ஓங்கி அமைந்திருக்கின்றன. முதலில் கோயில்களை எடுத்துக்கொள்வோம். அவைகளின் உருவ வளர்ச்சியும் ஆன்மீக வளர்ச்சியும் சோபான முறையில்தான் வளர்ந்தன. தனி மரத்தின் கீழ் வீற்றிருக்கும் திருவுருவமே பண்டைக் காலத்தில் தோன்றி இருக்க அதுவே வளர்ச்சி முறையில் செங்கல் தளியாகவும், கற்கோயிலாகவும், பெருங் கோயிலாகவும் வளர்ச்சியுற்றதல்லவா ? ஆன்மீகத் துறையிலும், வெறும் அன்பில் வளர்ந்த சமயக் கொள்கை சித்தாந்த சமயமாகப் பரிணமித்ததென்றால் அது தமிழ் நாட்டிற்கேற்ற ஒரு உயர்ந்த தத்துவம் அல்லவா ? கோயில்களில் நடைபெறும் திருவிழாக்களும் குறிப்பிட்ட நோக்கங்களைக் கொண்டவையேயாகும். தத்துவ அறிவைப் பின்பற்றியும் சரித்திர

நிகழ்ச்சிகளைப் பின் பற்றியும் அத் திருவிழாக்கள் தோன்றி இருக்கின்றன. கோயில் வரலாறுகளும் சடங்குகளின் போக்குகளும் திருவிழாக்களின் நோக்கங்களும் சிறந்த ஆராய்ச்சிக்கு ஏற்றவைகளாக இருக்கின்றன. தென்னிந்தியக் கோயில்களின் ஆராய்ச்சியிலே தமிழ் மக்களின் பண்பாடு சிறந்து விளங்கக்கூடியதாக இருக்கின்றது. இந்த ஆராய்ச்சியை நமது கோயில் அறங்காப்பாளர்கள் சிறப்பாக எடுத்துக் கொண்டு பொதுமக்களுக்கு வெளியிட வேண்டும். இந்த வகையில் செய்யக்கூடிய முயற்சியானது பெரும் பயனைத்தரும்.

நமது ஆலயங்களைப் பற்றியும் திருவிழாக்களைப் பற்றியும் குறைகூறும் மேல் நாட்டார்களும் அரைகுறையாகப் படித்த நமது நாட்டு இளைஞர்களும் அவைகளின் உள்ளுறைகளை அறியாத வகையில் அந்நோக்கங்களைக் கொண்டிருக்கிறார்கள். தற்காலத்து அறங் காப்பாளர்களும் உள்ளுறைப் பொருளை யறியாமல் வெளி நாட்டங்களையே போற்றுகிறார்கள். பொருள் விளங்காத சடங்குகளால் யாருக்கு என்ன பயன்? பாமரமக்களை மகிழ்விக்கச்செய்யும் ஆடல் பாடல்களினால் அறிவு உலகம் சிரிக்குமேயன்றிப் போற்றுதல் செய்யாது. கோயிலினுடைய வருவாயிலிருந்து இந்த ஆடம்பரச் செலவுகளுக்குச் செய்யும் விரயங்களை நிறுத்திப் பண்பாடு விளங்கும் ஆன்மீக வேலைகளில் ஈடுபட்டால் நலமாக இருக்கும். அண்மையிலே ஒரு புகழ் பெற்ற பண்டைக் கோயில் விழாவிற்குச் சென்றிருந்தேன். அங்கு நடந்த இரண்டு நாள் கூட்டத்திற்கும் மக்கள்செய்த செலவிற்கும் அளவில்லை. இரவும் பகலுமாக இரண்டு நாளும் பொது மக்களின் வீண் விரயங்கள் எழுத்தில் அடங்கா. இதனை முன்னிட்டு வியாபாரிகள் செய்த பண்டமாற்றுதல்களும் வேடிக்கை வினைகளும் மக்களைக் கவர்ந்தனவேயன்றி விழாவின் தத்துவத்தை எவரும் உணரவே இல்லை. பொதுமக்கள் பெற்றதெல்லாம் பொழுது போக்கும் ஆடம்பரக் காட்சியும் உடல் நலமின்மையும் அன்றி நலம் தரத்தக்கதொன்றும் இல்லை. காப்பாளர்கள் பொருள் கொடுத்து ஏற்படுத்திய சமயச் சொற்பெருக்குகளுக்குச் செவி கொடுப்பாரில்லை. அமைதியின்மையால் ஏற்பட்ட குழப்பத்திற்கு அளவில்லை. மேளமும் இசையும்

கவர்ந்த கவர்ச்சி சமயப் பேச்சுகளுக்குக் கிடைக்கவில்லை இவ்வாறு திருவிழாக்களின் போக்கு செல்லுமானல் இவைகளால் யாருக்கு என்ன பயன்?

ஆனல், விவிலியர் வழிபாடோ இசுலாமியர் தொழுகையோ காட்டும் அமைதி நம் சமயிகளுக்கு வேண்டியதில்லையா? ஆலயங்களில் திருவிழாக் காலங்களிலும் நாள் தோறும் நடைபெறும் ஆராதனைகளிலும் அமைதி என்பது சிறப்பாக இருக்க வேண்டும். பிறர் எளனம் செய்யும் படியான காட்டுமிராண்டித்தனம் கூடாது. அருமையான சொற்பெருக்குகளை நடாத்தும்போது நிம்மதி தோன்ற வேண்டும். இறைவனுக்கு வழிபாடு இயற்றும் போதும் அப்படியே. பழனிமலைமீது முருகக் கடவுளின் வழிபாட்டில் காணும் அமைதியின்மை ஒரு பழமொழிபோல் ஆகி விட்டது. அதுவும் தற்போது சீரடைந்து வருகின்றதென்ருல், எல்லா ஆலயங்களிலும் ஏன் இது ஏற்படக்கூடாது? மாலை 5 மணி முதல் இரவு 9 மணி வரையில் பழனி முருகன் சன்னிதியில் தற்போது அமைதி நிலவுகிறது. இதற்குக் காரணம் ஆட்சி முறையும் ஓதுவார் திருப்புகழிசையுமே யாகும்.

நமது கோயில்களில் மகத்தான மண்டபங்கள் ஏன் கட்டி வைத்தார்கள்? சமயச் சொற்பொழிவுகளுக்காக அல்லவா? சம்பந்தனர்போல ஓதுவார்கள் அமைதியாக அமர்ந்து திருமுறைகளை ஓதிக்கொண்டு இருந்தால் குழந்தைகள் முதற்கொண்டு பாமர மக்களும், அறிஞர்களும் அமைதியுடன் கேட்கமாட்டார்களா? சமயஞானம் பெறமாட்டார்களா? பண்டைக் காலத்தில் மக்களுக்கு அறிவுறுத்தும் பொருட்டுக் கோயில்களில் அழகிய சிற்பங்களும் ஓவியங்களும் தீட்டி வைத்தார்கள். மற்றும் அவைகளில் திருமுறைப் பாக்களைச் செதுக்கி வைத்தார்கள். விமானங்களிலும், கோபுரங்களிலும் திருவுருவங்களையமைத்து வைத்தார்கள். இடைக் காலத்தில் இவற்றின் பொருள் விளங்காமல் வெள்ளையும், மஞ்சளும், எண்ணெயும் பூசிவிடத் தொடங்கினர்கள். பண்டைய நோக்கம் முழுவதும் பாழாயிற்று. ஆனல், நல்ல வேளையாகத் தற்போது இவ்விழிந்த செயல்கள் நீக்கப்படுகின்றன! கோயில்களில் திருப்பாடல்கள் எழுதுவதும் திருவுருவங்களைத் தூய்

மைப்படுத்துவதும் நிலைய விவரங்களை வெளிப்படுத்து வதும் கைக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஒன்று மட்டும் கவனிக்கவேண்டும். திரைப்பட உருவங்களையும் அரசியல் வாதிகளின் உருவங்களையும் தற்கால நாகரிக விளையாட்டு உருவங்களையும் கோபுரங்களில் ஏற்றுவது சரியா என்று சிறிது சிந்திக்க வேண்டும். ஒவ்வொரு ஆலயத்திலும் சமயச் சொற்பொழிவுக்கென்று ஒரு மண்டபத்தை ஒதுக்கி வைத்து அங்கு எவ்வித ஓசையுமில்லாமல் செய்து அறி ஞர்களை நாடோறும் தற்கால முறைப்படி பேசச் செய்ய வேண்டும். இதில் செலவழிக்கும் ஒரு நூறு ரூபாய் மருந்து வேடிக்கைக்கும் கூத்துக்களுக்கும் செலவழிக்கும் ஆயிரம் ரூபாயைக் காட்டிலும் பதின்மடங்கு சிறந்த தென்று அறியவேண்டும்.

சமய நிலையங்களின் முக்கிய நோக்கம் மக்களுக்கு ஆன்மீக உணர்ச்சி தருவதேயாகும். அதனை நமது அறங் காப்பாளர்கள் முழுமையுமாக உணரவில்லை. நிலையங்களின் வருவாய்களை உயர்த்துவதே சிறந்த கொள்கை என்று எண்ணுகிறார்கள். அவ்வாறு உயர்த்துவதற்கு அவர்கள் செய்யும் முறையும் ஒழுங்கானது அல்ல என்று கூறலாம். கோயில்களைச் சுற்றிலும் அழகான பூங்காக்களையும் தடா கங்களையும் ஏற்படுத்தாமல் சாப்பாட்டுக் கடைகளையும் விளையாட்டுச் சாமான் கடைகளையும் வைக்க இடம்கொடுக் கிறார்கள். இந்தச் செயலினால் கோயிலுக்கு வருவாய் அதிகமாகலாம். ஆனால் அதனால் ஏற்படும் சச்சரவுகளும், அசுத்தங்களும், அமைதியின்மையும் அளவில்லை. புனித மான தீர்த்தத்தைச் சுற்றிச் சாப்பாட்டுக் கடைகளை வைத் தால் அத்தீர்த்தநீரானது தூய்மையற்றுப் போகுமென்று அவர்கள் நினைப்பதில்லை. கோயில்களைச் சுற்றிப் பொரி கடலைக் கடைகள், பழம் கரும்புக் கடைகள் அசுத்தத்தைப் பெருக்கும் என்று எவருக்குத்தான் தெரியாது? போதாக் குறைக்குச் சிறுசுருட்டுக் கடைகளும் லாகிரிக் கடைகளும் அவைகளுக்கு ஒத்த ஒலி பெருக்குக் கடைகளும் ஏராள மாகிவிட்டன. அண்மையிலே ஒரு பெரும் திருவிழாவில் கோயிலின் வெளியில் மட்டுமல்லாமல் கோயிலுக்குஉள்ளே மண்டபங்களிலும் பிரகாரங்களிலும் கடைகள் வைக்க இடம் கொடுத்து விட்டார்கள். இந்தச் செயல்களெல்லாம்

பணப் பெருக்கை முன்னிட்டே செய்யப்பட்டன. இதனால் விளைந்த விளைவு என்ன? அருமையாகப் பக்திச் சுவை சொட்டச் சொட்டப் பாடிய இசைவல்லார்களின் இசை முழுவதும் வீணாயிற்று. கூடியமட்டும் சச்சரவு ஒலிகளை அடக்கிப் பார்த்தும் கோயில் நிர்வாகிகளால் வெற்றி அடைய முடியவில்லை. சிறுவருவாய் எண்ணிச் செய்த இச்செயலினால் உண்மை வருவாய் ஆன அன்புப் பாடல்கள் பயனற்றுப் போயின. இதனை அறங்காப்பாளர்கள் நன்கு ஆராய வேண்டும்.

**ஏனைய சமய நிலையங்கள்:** சமய நிலையங்களில் கோயிலைத் தவிர மடாலயங்கள், சங்கங்கள் முதலிய பலவும் உண்டு. இவைகளில் மடாலயங்கள் பண்டைக்கால முதற் கொண்டே நாட்டிற்குச் சமயத்தைப் பற்றிய நன்மைகள் புரிந்து வந்தன. பெரும்பாலும் இல்லறத்தைத் துறந்த துறவிகளே மடாலயங்களை ஏற்படுத்தி அங்கே சமயத்தொண்டு செய்துவந்தார்கள். சைவத்தில் நான்கு சமய குரவர்களின் திருப்பெயரால் தோன்றிய மடங்களும், பின்னால் 13-ஆம் நூற்றாண்டில் தோன்றிய மற்ற சைவ மடங்களும், வீர சைவப் பெருங் குரவர்களால் தோன்றிய மடங்களும் நாட்டில் சிறந்த திருத்தொண்டுகள் செய்து வந்தன. ஒவ்வொரு மடத்தைச் சுற்றிலும் மடத்தின் பணியாளர்கள் உணவு, வழிபாடு முதலியவைகட்கும் திருவிழாக்களுக்கும் பல நிபந்தங்கள் நிலமாகவும் பணமாகவும் கிடைத்தன. மடாலயங்களில் திருத்தொண்டு செய்துவந்த துறவிகள் நன்கு படித்தவர்கள். இரு மொழிகளையும் ஓதிச் சிறந்த நூல்களை இயற்றினார்கள். பிற நாட்டார்களால் தமிழ் நாட்டில் ஏற்பட்ட குழப்ப நாட்களில் அத்துறவிகளே தமிழை வளர்த்தினார்கள். தமிழ் மட்டுமன்றிச் சைவத்தையும், வைணவத்தையும் பொது மக்களிடையிற் பரப்பி வந்தவர்களும் அவர்களே. மடாதிபதிகள் தன்னலம் கருதாத பெரியார்கள். 16 முதல் 18 வரை மூன்று நூற்றாண்டுகள் மடாதிபதிகள் செய்த திருத்தொண்டு அளவிட முடியாது. அன்னார்கள் மக்களிடைச் சென்று அவர்களை நல்ல ஒழுக்கத்தில் நிறுத்தினார்கள். அவர்கள் காலத்தில் தமிழ் இலக்கியம் சிறந்து சிறு பிரபந்தங்கள் பெருகின. அவர்களால் தான் வடமொழி நூல்கள் பல தமிழுக்கு வந்தன. மேலும் உரை

நடை நூல்கள் அவர்கள் காலத்தில்தான் தோன்றிப் பெருகின. ஆகவே, பொதுமக்களும், குறுநில மன்னர்களும், அவர்களுக்கு வேண்டிய அளவு உதவி புரிந்தார்கள். தமிழ் நாட்டில் மடாலயங்கள் சிறந்த சமய நிலையங்களாகி எவராலும் போற்றக்கூடிய நிலைக்கு வந்துவிட்டன. அவர்கள் சிறு கோயில்களைப் பழுது பார்த்துப் பெரிதும் ஆக்கினார்கள். வெள்ளையர்கள் நம் நாட்டிற்கு வந்த காலத்தில் கோயில்களின் ஆட்சிகளைப் பராமரிக்கத் திருமடத் தலைவர்களையே நியமித்தார்கள். இந்த வகையில் தென்னாட்டுக் கோயில்களில் பெருங் கோயில்கள் மடாலயங்களின் ஆளுகைக்குள் வந்துவிட்டன. அப்படிப்பட்ட மடாலயங்கள் திருவாவடுதுறை, தருமபுரம், வேளுக்குறிச்சி முதலியவைகள்.

வைணவ சமயத்திலும் துவைத, அத்வைத சமயங்களிலும் சமயகுரவர்கள் மடாலயங்களைத் தோற்றுவித்து அவைகளில் சமயப்பணியைப் பெருக்கிவந்தார்கள். சைவத்தைப்போலவே வைணவத்தில் அகோபிலம், வானமாமலை, திருக்குறுங்குடி முதலிய மடாலயங்கள் தங்கள் மடங்களையேயன்றிப் பல கோயில்களையும் பராமரித்து வந்தார்கள். அவர்களே வைணவ தத்துவ நூல்களைத் தமிழில் எழுதியும் மொழிபெயர்த்தும் வந்தார்கள். பல சிறு பிரபந்தங்களையும் எழுதி வைத்தார்கள்.

இனி, துவைத சமயத்திலும் அதே முறை காண்கின்றோம். கருநாடக நாடுகளில் அவர்களுடைய சமயப்பணி மிகச் சிறந்து விளங்கியது. 13 ஆம் நூற்றாண்டு முதல் உடுப்பிக்குச் சுற்றிலும் எட்டு மடங்கள் தோன்றித் துவைத சமயத்துத் தத்துவங்களைப் பெருக்கின. அவர்கள் கன்னட மொழியையும், வடமொழியையும் பெரும்பாலும் ஆதரித்தார்கள். இனி அத்வைத மடங்களோ தென்னாட்டில் மட்டுமின்றி வடநாட்டிலும் கூட அரிய பணிகளைச் செய்தன. அவர்கள் சிறப்பாகத் தமிழை வளர்த்தாவிடினும் வடமொழியை மிகப் புகழ்பெற வளர்த்தினார்கள். அருமையான தத்துவார்த்தங்களை உலகினுக்கு அளித்தவர்களில் அத்வைதப் பெரியோர்களே சிறந்தவர்கள். மேற்கு நாட்டவர்களில் இந்தியத் தத்துவ ஞானம் என்றால் அத்வைதி

கள் தோற்றி வைத்த வேதாந்த ஞானமேயாகும். வேறு நாட்டார்களுக்குப் பாரததேசம் அடிமையான பிறகு அநேக நூற்றுண்டுகள்வரை வடமொழியைப் பாதுகாத்த அறிஞர்கள் அத்வைத மடாலயத்தார்களே. (தொடரும்)

---

# சதாவதானம் நா. கதிரைவேற் பிள்ளை

எஸ். சுப்பிரமணியம், மாலங்தெணி, புலோலி

இவர் இற்றைக்கு 97 ஆண்டுகளுக்கு முன் யாழ்ப்பாணத்து மேலைப்புலோலியில் உள்ள வேளாள குலத்திலே நாகப்பபிள்ளை என்பவருக்கு மகனுகப் பிறந்தார். சிறு வயது முதலே அதிதீவிர புத்தியும் அதிஞாபக சக்தியும் வாய்ந்தவராகக் காணப்பட்டார். அவ்வூரிலுள்ள வித்தியாசாலையில் படித்து வரும்பொழுது வறுமை காரணமாக ஆருவது வகுப்புடன் முடித்துக்கொண்டு சிதம்பரப் பிள்ளை நொத்தாரிசிடம் இலேகராகக் கடமை பூண்டிருந்தார். அவரிடம் சிலகாலம் இருந்தபின் சென்னைக்குச் சென்ருர்.

சென்னையில் பல அறிஞர்களிடம் கல்வி கற்றுத் தருக்கம், சித்தாந்தம், இலக்கணம், இலக்கியம் முதலாம் துறைகளில் நிபுணராக விளங்கிப் பல சபைகளிலும் பேசத் தொடங்கினர். இவ்வாருக அரச சபைகளிலும் பேசிய காரணத்தால் இவரின் ஆற்றல் எல்லோருக்கும் தெரிய நேர்ந்தது. இதனுல் அயலூரவர்களும் கதிரைவேற் பிள்ளையவர்களை அழைப்பித்துச் சொற்பொழிவுகள் நிகழ்த்துவித்தனர். இவரது பேசுந்திறன் தனித்தன்மை வாய்ந்தது. அத்தோடு பேச்சுக்கு உகந்த அழகான இனிய குரலும் அமைந்திருந்தது. பலமணி நேரம் தொடர்ந்து பேசும் ஆற்றலுமுடையவர். தருக்கிப்பதில் ஒப்பில்லாதவராக விளங்கினர். எந்த அறிஞராயினும் இவர் முன் எதிர்ப்பட்டு ஒரு பொருளைப்பற்றி வினவினுலும், விசாரித்தாலும், சரியானதை அவர்கள் திருப்தி அடையும்படி விளக்கமாகக் கூறுவார். இவருடன் விவாதித்தவர் எவரும் வெற்றி யடைந்ததில்லை. தொல்காப்பியமும், குறளும் வல்லவர்.

கதிரைவேற் பிள்ளையவர்கள் மொழித்துறையில் பெரி தும் ஈடுபட்டார். இவர் இயற்றிய தமிழ்ப் பேரகராதியே மற்ற அகராதிகளுக்கு வழிகாட்டியாய் இருந்தது. எம்மதத் தவர்களும் சம்மதத்துடன் போற்றிப் புகழக்கூடியதாய் இவர் மொழித்துறை ஈடுபாடுகள் அமைந்திருந்தன. பிள்ளை யவர்களின் நைடத உரை, சைவபூஷண சந்திரிகை முதலாம் நூல்களைத் தமிழகம் என்றும் மறக்கமுடியாது. கதிரைவேற் பிள்ளையவர்கள் இயற்றிய நூல்கள் கூர்மபுராண விருத்தி யுரை, பட்டினத்துப் பிள்ளையார் புராண உரை, திருஞான சம்பந்த நாயனர் வசனம், புத்தமத கண்டனம், சென்னைக் கந்தர் நவமணிமாலை முதலாக மற்றும் பலவாம்.

ஆறுமுக நாவலரது காலத்தில் வலியிழந்த மாயாவாதம் இவர் காலத்திலும் துன்பம் கொடுத்தது. கதிரைவேற் பிள்ளை அவர்கள் இதைக் களையும் வேலையில் ஈடுபட்டார். முற்றுகவும் களைந்தார். ஒருமுறை மாயா வாதிகள் சூழ்ந்த கூட்டத்தில் பேசிக்கொண்டிருந்தபோது பல கேள்விகள் எழுந்தன. இவைகளுக்கு எல்லாம் பதிலிறுத்து அவர்களைக் குறுக்குக் கேள்விகளால் திணறவைத்தார். இவரை "மாய வாத துவம்சகோளரி" என்ற சிறந்த பெயரால் சபையோர் அழைத்தனர். இவரின் திறமையை அறிந்த ஆரணி அரசர் பிள்ளையவர்களைச் சமஸ்தான வித்துவானுக்கி "அத்துவித சித்தாந்த மதோத்தாரணர்" என்ற பட்டமும் சூட்டிக் கௌரவித்தனர்.

பிள்ளையவர்கள் அட்டாவதானம், தசாவதானம், சதா வதானம் முதலியன செய்வதிலும் நிபுணர். இதனுல் இவரை "சதாவதானி" என்றும் அழைத்தனர். தமிழுக்கும் சைவத் திற்கும் தமது குறுகிய வாழ்நாளில் அளப்பரிய தொண்டு செய்த கதிரைவேற் பிள்ளையவர்கள் 1907-ஆம் ஆண்டு பங்குனி மாதம் நீலகிரியில் ஈசன் நிழலையடைந்தார். இவரின் பிரிவு குறித்துக் திரு. வி. க. அவர்கள் தம் பாடல் மூலம் தம் உள்ளக்கிடக்கையை வெளியிட்டார்.

"பன்னு பாரபவத்துப் பங்குனிப் பதின்மூன்றில்
மன்னுமுதற் பக்கஞ்சேர் மாமகத்தில் மின்னு
கதிரைவேலன் ருதை கான்மலர்க் கீழ்ச்
சேர்ந்தான் கதிரைவேல் நாவலவன் காண்"

" சங்கரனைப் போற்றிசிதஞ் சாக்கியரைக் காய்ந்து
மன்னர் சங்கந்தனை நண்ணிச்சார் மகத்தி
லங்கயிலைப் புக்க கதிரைவேற் புண்ணியனைப்
புன்னெஞ்சே யிக்கால வாசகனென் றேத்து "

அன்னாரின் 50-ம் நினைவு தினம் 11—4—57 ஆகும். தமிழர்களாகிய நாம் விழாவெடுத்து அவர் புகழ் பாடுவோமாக.

---

# திருச்சேய்ஞலூர்

சு. சுவாமிநாத தேசிகர், சுந்தரப்பெருமாள் கோயில்

" நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு
மாலடைந்த நால்வர்கேட்க நல்கிய நல்லறத்தை
ஆலடைந்த நீழல்மேவி யருமறை சொன்னதென்னே
சேலடைந்த தண்கழனிச் சேய்ஞலூர் மேயவனே "

சிவமணம் கமழும் செந்தமிழ் நாட்டிலே சிவபெருமான் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தலங்கள் பல இருப்பினும் அவற்றிற்கெல்லாம் தலைசிறந்து சிறப்புற்று விளங்கும் தலம் இத் திருச்சேய்ஞலூரே யாகும்.

**இருப்பிடம் :** தென்னிந்திய இருப்புப் பாதையில் தஞ்சை – மாயூரத்திற்கு இடையில் உள்ள கும்பகோணம் புகைவண்டி நிலையத்திலிருந்து (கும்பகோணம் காவிரியாற்றின் பழைய பாலம் கடந்து) வடகிழக்கே ஒன்பதரை ($9\frac{1}{2}$) மைல் தூரத்தில் உள்ள திருஆப்பாடியை அடைந்து அதனின்று தெற்கே அரை மைல் ($\frac{1}{2}$) தூரத்தில் இப்பதியை அடையலாம்.

**வரலாறு :** சேய் (குமாரக் கடவுள்) தாம் உறைதற்கு நல்ல ஊர் என்று உவந்தமை கண்டு, தேவர்கள் இதனை சேய்—நல்லூர் (சேய்ஞலூர்) என்றனர்.

முருகப்பெருமான் தாரகாசூரனைச் சங்கரித்துக் கிரவுஞ்ச மாலையைப் பிளந்துகொண்டு வரும்வழியில் இத்தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை வணங்கிப் படைக்கலம்

பெற்றுச் சென்றதாகக் கூறப்படுகிறது இவ்வாலயம். திரு ஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளால் பாடல் பெற்றதாக விளங்குகிறது. சண்டேசுர நாயனர் அவதரித்ததும் இத் தலத்திலேதான். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் பல தலங்களையும் தரிசித்து இத்தலம் வரும் சமயம், சண்டேசுர நாயனர் அவதரித்த தலம் என்று தெரிந்ததும் முத்துச் சிவிகையினின்றும் இறங்கி நடந்து சென்று தரிசித்துச் சென்றார்.

**சண்டீசர் வரலாறு:** இத் திருச்சேய்ஞலூர் என்னும் பதியில் எச்சதத்தன் என்னும் பிராமணருக்கு விசார சருமன் என்ற ஒரு ஆண் குழந்தை இருந்தது. அக்குழந்தை தனது ஏழாவது வயதில் இவ்வூர்ப் பசுக்களை எல்லாம் அருகில் வடபால் உள்ள மண்ணி நதிக்கரைக்கு ஓட்டிச்சென்று நீராடி அத்திமரத்தடியில் மணலினல் சிவலிங்கம் அமைத்து எல்லாப் பசுவின் பாலையும் கறந்து மணலாலான அச்சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்து பூசை செய்வது வழக்கம். இதனை உணர்ந்த இவரது தந்தையார் இவ்வாறு செய்வதைத் தடுத்தார். கேளாது மீண்டும் பூசை செய்வதைப் பார்த்த தந்தையார் அபிஷேகத்திற்கென வைத்திருந்த பாற் குடங்களைக் காலினல் உதைத்துக் கவிழ்த்தார்.

இதைக் கண்டவுடன் மனது தாளாத விசாரசருமர் (சண்டீசர்) அருகில் உள்ள கோலை எடுத்து மழுவாகக் கொண்டு சிவ அபசாரம் செய்த தந்தையின் கால்களை வெட்ட, கோலும் உண்மையான மழுவாகித் தந்தையின் இரண்டு கால்களையும் துண்டித்துவிட்டது. தந்தை கீழ் வீழ்ந்தார். தந்தை கீழ் வீழ்ந்ததையும் பொருட்படுத்தாமல் மீண்டும் சிவசிந்தனையில் ஆழ்ந்து பூஜை செய்வதை அறிந்த சிவபெருமான் உமாதேவியாருடன் விருஷபத்தின்மேல் ஏறி விசார சருமருக்கு அரிய காட்சி தந்து “நீ தந்தையின் குற்றத்தை உணர்ந்து தண்டித்தமையால் இனி உனக்கு நாம் தந்தையானேம் என்று அன்போடு சொல்லிப் பின்னர் விசாரசருமர் வேண்டுகோளின்படி, சிவபெருமான் நாம் உண்ட அமுதும், உடுத்திய ஆடையும், சூடிய மாலையும் உனக்கே உரிமையாகும்படி சண்டீசன் என்னும் பதவியைத் தந்தோம்” எனக் கூறி ஆட்கொண்டருளினர். இத்திருச்சேய்ஞலூர் என்னும் பதிக்கு வடபால் அரை (½)

மைல் தூரத்தில் உள்ளது. ஆதலின் இத்திருச்சேய்ஞலூர் என்னும் பதியில் சண்டீசர் அவதரித்துத் திருஆப்பாடியில் "சண்டீசன்" என்னும் பதவியைப் பெற்ருர்.

**ஆலய அமைப்பும் திருவுருவும் :** இவ்வாலயத்திற்குப் பின்னல் உள்ள தீர்த்தத்தில் சிபிச்சக்கரவர்த்தி நீராடிப் பிணியைத் தீர்த்துக் கொண்டதாகக் கூறப்படுகிறது. இவ்வாலயம் மிகவும் சிதைவுற்றும், இடிந்தும் மிக மோசமான நிலையில் இருக்கிறது ; சுவாமி சந்நிதானம் கிழக்கு பார்த்து அமைந்துளது. இவ்வாலயத்தில் உள்ள தேவியாரின் திருஉருவம் சுவாமி சந்நிதியில் பெயர்த்து வைக்கப்பட்டுள்ளது. இவ்வாலயத்தில் மூல சிவலிங்கப் பெருமானைத் தவிர மற்ற எல்லாப் பாகங்களும் இடிந்து தரைமட்டமாகிவிட்டன. இத்தலம் சண்டேசுர நாயனுர் அவதரித்த தலமாக இருந்தும், சண்டேசுரர் திருவுருவம் தென்முகக் கடவுளின் அருகில் பெயர்த்து வைக்கப்பட்டுள்ளது மிகவும் வருந்தத் தக்கதேயாம்.

**திருப்பணி :** இவ்வாறு இடிந்தும் பாழடைந்தும், சிதைவுற்றும் தரைமட்டமாகப் போகும் இவ்வாலயத்தை அருகாமையில் உள்ள பொருள் வளம்படைத்த புண்ணியசீலர்களில் ஒருவரும், சைவ சமயத்தைப் பாதுகாப்பவர்களுமான திருப்பனந்தாள் காசி மடத்தில் இருபதாம் பட்டத்தில் இப்போது எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் இவ்வாலயத்தைத் திருப்பணி செய்ய முன்வருவார்கள் என்று எண்ணப்படுகிறது.

**திருநாமங்கள் :** சோழ நாடு ; திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது. சுவாமி—சத்தியகிரீசுவரர் ; தேவி—சகிதேவியார் ; தீர்த்தம்—மண்ணிநதி.

"சேயடைந்த சேய்ஞலூரிற் செல்வன சீர்பாவித்
தோயடைந்த தண்வயல்சூழ் தோணிபுரத் தலைவன்
சாயடைந்த ஞானம்மல்கு சம்பந்தன் இன்னுரைகள்
வாயடைந்து பாடவல்லார் வானுலகாள் பவரே.

திருச்சிற்றம்பலம்.

---

# முருகன் நுண்மாண்

(மலர்-30 ; இதழ்-7 ; 224-ம் பக்கத் தொடர்ச்சி)

அக்கினிக் கண்ணால் அரனீன்ற மைந்தனுக்குஅச்
சக்கிலே யென்பாருந் தவத்தரோ ? —வேண்பாமாலை

" கந்தக் கடம்பமலர் மார்பா ! கதிர்வேற் படைக் காவலவா ?
கண்களாறு மூன்றுடை யானே! கருணைக்கடலே! கதித்துணையே!
சந்தப் புலவர்க் கெளியானே ! தமியேற் கருளாய் ! * *
* * * * —கௌமார விஜயம்

" * * * *
* * பரிதியாறு புரையு
மணிமுடிச் சீரு மறுவிலா மதிய
மூவிரண் டன்ன முகங்களும் பொலிந்த
நீற்றொடு திலக நிலவிய நுதல்களும்
அலர்ந்து துவியா அறுமூ விழிகளும்
பத்தர் சொல்லன்றிப் பருகாப் பன்னிரு
செவிகளும் * * * "
—ஒருபாவொருபஃது

வடமொழியில் ஸ்கந்தபுராணமும், ஷண்முகத் தியான மும் இதனை வலியுறுத்தும்.

பிரத்தியங்கத்தின் சிறப்பு மலிந்த பாடல்கள் இரு மொழியிலும் பல. அவற்றுள் வடமொழியில் ஒன்று வருமாறு :—

" புஜே சௌரிய தைரியம், கரேதான தர்மம்,
கடாக்ஷேதி சாந்தி, ஷடாஸ்யேசு காஸ்யம்,
ஹிருதப்ஜேதயா யஸ்யதம் தேவமன்யம்,
குமாரன்ன ஜானே ! நஜானே !! நஜானே !!! "

(இ-ள்) தைரியமுள்ள தோளும், தானதர்மம் புரியும் கைகளும், சாந்தமுடைய (கண்ணோட்டம்) கடைக்கண்ணும், புன்முறுவலுடைய ஆறுமுகமும், தயையுடைய இருதயமும் உடைய குமாரக் கடவுள் போன்ற வடிவை மும்மையும் அறிந்தோமில்லை. இதனைத் தமிழர் ' நிலவுமிழும் புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாய், இருண்மலத்துண் மோகமுறும் பல்லுயிர்க்கு முத்தியளித்தற்கு மலபாக

முறவே கடைக்கண்பாலித்து, விண்டபருவ மலர்பூத்தாங்கு அருள்பொழியுங் கண்மலரீராறும், பாரப்புயசைலம் பன்னிரண்டு, பறியாக் கருணைத் திருவுருவாய், அறனெலாமோருருக் கொண்டோய்.' என்றதும் அது. (கந்தர் கலிவெண்பா)

மயிலையு மவன்றிருக் கைஅயிலையுமவன்
கடைக்கணியலையு நினைந்திருக்க-வாருமே " —திருவதப்பு

**சாங்கம் :**

சாங்க வகுப்பில் ஆயுதங்கள் விவரிக்கப்படுகிறது. முருகனுக்குப் பன்னிரு கைக்கு ஆயுதங்கள் மாறுபட்டுக் கூறப்படுகிறது. அவை முன்னர் கூறிய மூர்த்தங்கட்கு ஏற்றதோர் அமைப்பென்க. இப்படைகளைப் பற்றித் திருமுருகாற்றுப்படை, திருச்செந்தூர் கலிவெண்பா கூறுவதை ஈண்டு நோக்கிக் கொள்க. இறைவன் வேல்தரும் சமயம் தந்த பிற ஆயுதங்களையும் ஓர்க.

" பொன்றிகழ் சடிலத் தண்ணறன் பெயரும்
பொருவிலா வுருவமுந்தொன்று
ணன்றுபெற்றுடைய வுருத்திரகணத்தோர்
நவிலருந்தோ மரங்கொடிவாள்
வன்றிறற் குலிசம் பகழியங் குசமு
மணிமலர்ப் பங்கயத்தண்டம்
வென்றிவின் மழுவு மாகிவீற் றிருந்தார்
விறன்மிகு மறுமுகன் கரத்தில் " —கந்தபுராணம்

சேந்தூர் அகவல்,

" பன்னிரு கமல பாணியு மவற்றின்
சூலமும் வேலுந் தோமரமுஞ் சாமும்
பாலமும் குலிசமும் பரிசையும் வாளும்
மாழியும் மழுவும் அபயமும் வரதமும் "

என்றும், ஷண்முகத் தியானம்,

" ஷட்வக்திரம் ஷிகிவாகனம் திரிநயனம் சித்ராம்ப ராலங்க்ருதம்
ஸக்திம் வஜ்ரமஸிம் த்ரிசூலமபயம் கேடம் தனுஸ் சக்ரகம்

பாசம் குக்குடமங்கு ஸஞ்சவாதம் தோபிர்ந தானம் சதா
த்வயாயேத்ஸ்வித ஷித்திதம் சிவஸுதம் ஸ்கந்தம் சுராராதிதம் ''

என்றும், ஜெயந்தன் சிறையில் கனவில் கண்ட காட்சியை, கந்தபுராணம்,

'' வீறு கேதனம் வச்சிர மங்குசம் விசிக
மாறி லாதவே லபயமே வலமிடம் வாத
மேறு பங்கய மணிமழுத் தண்டுவில் லிசைந்த
வாறி ரண்டுகை யறுமுகங் கொண்டு வேளடைந்தான்

என்றும், ஆயுத வகைகளில் மாறுபட்டுக் கூறுவதைச் சிந்திக்க. முருகன் கரத்துள்ள படைக் கலங்களெல்லாம் பல தெய்வத்தின் படைகளென்பது மறக்கற்பாலதன்று. ஆன்ரோர் கடவுள் வணக்கம் கூறுங்கால் ஏனைய தெய்வங்களின் இயல்பை எடுத்துக்கொண்ட வடிவத்தில் காட்டி சமஷ்டிக் கடவுளென்று தெளிவு படுத்தப் பிற தெய்வப்படைகளை அமைத்துக்காட்டல் மரபு.

தணிகைப் புராண சிவசக்தி வணக்கம் இம்முறை பற்றி நிற்பது காண்க.

'' சீரணி சிருக்கு மணிவடஞ் சங்கு
திகிரி சூலப்படை யிலைவேல்
போரணி பாச மங்குசம் கழைவில்
பூங்கணை வேறு வேறணியா
ஆரணன் மாயன் அரனிப முகத்தன்
அனங்க னென் றிவர்தொழிற் கெல்லாங்
காரண மாத றெளித்தருள் கொழிக்குங்
கன்னியை யுன்னியேத் தெடுப்பாம்.''

மேலே காட்டிய ஆயுத வர்ணனையால் முருகனும், ஏனைய தெய்வத்தொழிலை ஆற்றும் திறலுடைய சமஷ்டிக் கடவுளென்பது வெள்ளிடைமலை.

முருகன் படைகளில் கோழிக்கொடியும் வேலுமே கொண்டாடப்படுவது. இதனை அருணகிரி,

'' ஆடும்பரி வேலணி சேவ லெனப்
பாடும் பணியே பணியாய் அருள்வாய் ''

"பக்கரை விசித்ரமணி பொற்கலனை யிட்டநடை
பக்ஷியெனு முக்ரதுர கமுநீபப்
பக்குவமலர்த் தோடையும் அக்குவடு பட்டொழியப்
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும் ;
திக்கது மதிக்கவரு குக்குடமும் ரக்ஷைதரு
சிற்றடியு முற்றியப னிரு தோளும்
செய்ப்பதியும் வைத்துயர் திருப்புகழ் விருப்பமோடு
செப்பென எனக் கருள்கை மறவேனே"

என்று அநுபூதியினும் திருப்புகழினும் சிறப்பித்தலால் அவற்றை இனி விவரிப்பாம்.

**சேவற்கொடி :**

"வாக்காலு மிக்க மனத்தாலும் எக்காலுந்
தாக்கா துணர்வரிய தன்மையினை—நோக்கிப்
பிறித்தறிவு தம்மிற் பிரியாமை தானே
குறிக்குமரு ளல்கக் கொடி"

முருகனது வலது திருக்கரம் ஆறனுள் ஒன்றிலிருப்பது வீறுகேதனம். கேதனம், கொடி, துவசம், சத்தி, வானி, தோகை, பதாகை, விலோதனம், படங்கு முதலியன ஒரு பொருள் குறிக்கும் பலவரி சொற்கள். இக்கொடி ஆண்டலை, மயூரம், கோழியென மூவகைப்படும். ஆண்டலைக் கொடியென்பது தலைமட்டும் ஆணுக ஏனைய உறுப்பெல்லாம் பக்ஷியின் வடிவுடையது.

"காடுங் காவுங் கவின்பெறு துருத்தியும்
ஆறுங் குளனும் வேறுபல் வைப்புஞ்
சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியினுங் கந்துடை நிலையினும்
ஆண்டலைக் கோடி யோடு மண்ணி—"

இம் முருகாற்றுப்படை அடிகட்கு நச்சினர்க்கினியர், "மாண்தலை கொடியொடு மண்ணி"—மாட்சிமைப்பட்ட தலைமையினுடைய கோழிக்கொடியோடே பண்ணி, இனி 'ஆண்டலைக் கொடி' என்று பாடமாயின் பேய் முதலியன பலியை நுகராமல் தலை ஆண் மகன்றலையும், உடல் புள்ளின் வடிவுமாக எழுதிய கொடியென்க" என உரை பகர்ந்தமை

காண்க. பிற்றை நாளில் ஆண்டலையை வேறுபடுத்தாமல் 'கோழி, குருகு, காலாயுதம், குக்குடம், ஆண்டலைப்புள், வாரணமென நிகண்டில் கோழிக்கே கூறியதும் காண்க. இதனை பின்பற்றியே அருணகிரியும் 'மாண்டலையின் கொடியோ டெழுதரிதாம் வடிவோங்கிய பாங்கையும்' என்றருளினர். இக்கொடி குறிஞ்சிநில மக்கள் முருகனை வழிபடும் காலத்து வைத்துக்கொள்வதேயன்றி ஏனையோரால் பாராட்டப்படவில்லை.

விடையேறிய சிவனுக்கு விடைக்கொடி; சிங்கமிவர்ந்த உமைக்குச் சிம்மக்கொடி. கருடன் கொண்ட மாலுக்கு கருடக்கொடி. அன்னமிவர்ந்த பிரமனுக்கு அன்னக் கொடி. அதுபோன்று மயில்மீது வரும் முருகனுக்கு மயிற் கொடி என்ப. ஊர்தி எதுவோ அதுவே கொடி யென்ற மரபு கொண்டு ஷண்முகத் தியானம் 'மயூரதுவசரத சகிதம்' எனவும், திருப்புகழ் 'நினது திருவடி, சத்தி, மயிற் கொடி நினைவும்' எனவும் கூறுகிறது. இவை யாவற்றினும் கோழிக்கொடியே விவகரிக்கப்படுவது. கோழி இருபாலுக்கும் பொதுப் பெயர். இவற்றில் ஆணுகிய சேவலே படங்காயுள்ளது. சேவல் என்ற கிளவி பொதுவாகப் புள் வகுப்பின் ஆண்பாலைக் குறிக்கும். இதனைத் தொல்காப்பியப் பொருளதிகார மரபியல் 48-வது சூத்திரம் கூறுதல் ஓர்க.

"சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணு
மாயிருந் தூவி மயிலலங் கடையே."

(இ-ள்) பறப்பனவற்றுள் ஆண்பாற்கெல்லாஞ் சேவற் பெயர் உரித்து. அவற்றுள் மயிற்காயின் அஃதாகாது.

'காமர் சேவ லேமஞ் செப்ப' எனவும், 'வளைக்கட் சேவல் வாளாது மடியின்' எனவும், 'தொகு செந்நெற்றிக் கணங்கோள் சேவல்' எனவும், 'கானங் கோழிக் கவர் குரற்சேவல்' எனவும், 'உள்ளூர்க்குரீஇத் துள்ளு நடைச் சேவல்' எனவும் வரும். பிறவும் அன்ன. மாயிருந்தூவி மயில் என்றதனன் அவை தோகை யுடையவாகப் பெண்பால் போலுஞ் சாயலவாகலான் ஆண்பாற் றன்மை இலவென்பது கொள்க. எனவே செவ்வேள் ஊர்ந்த மயிற்காயின் அதுவும் நேரவும் படுமென்பது.' மற்றோரிடத்து 'குதிரையுள்ளாணினைச் சேவலென்றதும் இக்காலத் தரிதாயிற்று.

அதுவுஞ் சிறகொடுசிவ ணுதாயினும் அதனைக் கடுவிசை பற்றிப் பறப்பது போலச் சொல்லுதல் அமையுமென்பது கருத்து ' என்றார் நச்சினார்க்கினியர்.

இனி உலகை நோக்கின் மிகத் துக்க நிலையிலிருந்து துக்கத்திலிருப்பதாக அறியாதும், அதிக சுகத்திலிருப்பதாகத் தெரியாதும், இவற்றிற்கு இடையில் துக்கம் போகவும் சுகம் வருவதுமான நிலைகள் காண்கிறோம். அவை நிரலே இருட்டு, வெளிச்சம், இருட்டுப் போகவும் வெளிச்சம் வரவும் உள்ள நிலைகள். அவையே இரவு, பகல், வைகறை போல்வன. இவை தாம் முறையே உயிர் உடலோடு கூடாத நிலை, உடலற்ற நிலை, உடலிலுள்ள நிலையில் நிகழ்வன. மேற்காட்டியவற்றில் உயிர் உடலோடு கூடிய வைகறையன்ன நிலையில் நாமிருக்கிறோமென்பது பெற்றோம். இந்நிலையில் சேவலே துயிலெழுப்புகிறது. நாதமே விழிக்கச் செய்வது. அந்த நாத தத்துவமே கோழிக்கொடியாதலும் காண்க.

" மன்னுஞா னக்கதி ரெழுந்தொளி பரப்பமா
  றுதூச நாத முழுதும்
அலகில்பவத் துயிலறக் கூவு சேவலுடன்
  அம்புலீ யாட வாவே !"

" கொக்கறு கோவென்றே உண்மையெடுத் தோதுங்
  குக்குடமே ! சிற்சுகமே ! * * * *
பக்குவத்தைக் கண்டோருன் நாத நிலைகண்டே
  பரவி நெஞ்சத் தடக்கியுனைப் பேரின்பஞ் சார்வார்."

நாதங்கொண்டு இறைவனை அறிய வேண்டும். நாதமே இறைவனென்றது முகமன். கடவுள் நாத அதீதன்—நாத தத்துவன் ஆவன். ' தேமேவு நாதமுநாதாந்த முடிவும் ' என்றதுமது. சேவற்கொடி ஏனைய படைக்கலத்தினும் உயர்ந்திருப்பதின் காரணம் யாவும் நாதத்தில் ஒடுங்க அதுவும் இறைவனிடம் ஒடுங்குமென்பதே.

இனி வைகறையை நோக்கின் திருவாசகப் பள்ளியெழுச்சி ' கூவின பூங்குயில் கூவின கோழி குருகுகளியம்பின ' என்று விடியலின் குறிகள் சில கூறுகிறது. அவர் அவ்வாறு அருளியதன் கருத்தென்னை ? குயில் பஞ்சம

சுரத்தைக் காதுக்கினிமையாகக் கூவின. கோழி இறைவன் நாமத்தை கூவிற்று. குருகு (வலியான்) மிருத்தியஞ்ச மந்திரத்தை ஒலித்தது என்பது. கோழி கொக்கறுகோ என்றமை கொக்கு - (சூரனாகிய) மாமரத்தை, அறு - வீழ்த்திய, கோ - இறைவன் என முருகன் சரித்திரக் கதையை ஒப்பிட்டுக் காட்டுவர். அந்தக் கோழியின் கூற்று " இருளிலுள்ளவர்களைத் தன்னைப்போல் முருகன் பெயரை வைகறையில் தினம் கூறினால் பிறவியிருள் நீங்கி ஞான பானு எழும் " என்றதைத் தெரிவிக்கின்றது.

" என்றனைக் கைப்பிடித் தாளுறு மிறைவன்
எழில்பெறு மலர்விழி மலர்ந்தெழு சமயம்
உன்றன துளவிருள் போக்குவன் நோக்கால்
ஒல்லையில் வருகென வெல்லினைக் கூவி
நின்றன இருங்கொடி யழைத்துறு முறையோ
நீடுறு மனைதொறுங் கூவின மிகவும்
இன்றெனை யாண்டுகொண் டருளிய போரூர்
இறைவனே ! பள்ளி யெழுந் தருளாயே !"

இக்கோழி குறித்துச் சரிதை பலவுண்டு "உற்ற விணில் ஊழியாம் போது முலவா உடுக்கொறித்த கோழி" யெனத் தணிகைத் தசாங்கம் கூறுவதைக் கல்லாடம் நன்கு விவரிக்கிறது.

" போழ்படக் கிடந்த வொரு பங்கெழுந்து
மின்னன் மாண்ட கவிரலர் பூத்த
சென்னி வாரணக் கொடும்பகை யாகித்
தேவர்மெய் பனிப்புற வான்மிடை யுடுத்திரள்
பொரியிற் கொறிப்பப் புரிந்த பொருணடித்
தாமரை பூத்த கைமருங் கமைத்தோய் " [26—31]

(உ - ரை) பிளவுபடக் கிடந்த வேறொரு கூறெழுந்து கொடிய பகையாகிய விளக்கம் பொருந்திய அழகு மாட்சிமைப்பட்ட முருக்கம்பூப் போன்ற செஞ்சூட்டுப் பொலிவு பெற்றதலையையுடைய கோழியாகித் தேவர்களுடம்பு நடுக்கமடைய, பொறிபோல ஆகாயத்தில் நெருங்கின நக்ஷத்திர கணங்களைக் கொறித்தலால் அது விரும்பின கருமத்தை (தேவர்க்கு இடுக்கணில்லாது) திருவுளம் பற்றித் தாமரை

மலரை நிகர்த்த திருக்கரத்தின் வலது பக்கத்தில் கொடியாக அமைத்துக் கொண்டோய்! வள்ளியைக் கவர்ந்து சென்ற முருகனே, குறவர் முதல்வனும் கொடுந் தொழிலெ யினரும் வளைத்துக்கொண்ட சமயம் கோழியின் ஆர்ப்பால் இறந் தனர். கந்தபுராணம்,

" என்றிவை குமரி செப்ப வெம்பிரா னருளாற் பாங்கர்
நின்றதோர் கொடிமாண் சேவ னிமிர்ந்தெழுந் தார்ப்புக் கொள்ளக்
குன்றவர் முதல்வன் றானுங் குமரரும் தமரும் யாரும்
பொன்றின ராகி மாண்டு பொள்ளெனப் புவியில் வீழ்ந்தார் "

—தக்ஷ - வள்ளி - 184

'ஏதங் கருதினர் சென்மின்! என்றேயும் இதங் கருதும், போதஞ் சிறந்தவர் வம்மின் என்றேயும் புகல்வன போல், வாதஞ் செறியக் கொடியாடும்' (போரூர் அலங். 46) எனக் கொடியின் அலைப்பை அலங்கரிப்பர். மற்றும் இச் சேவலின் நிறத்தை வெண்மை யென்பர் பலர். செம்மை என்பர் சிலர்.

" தீநிறக் குடுமி வெண்சேவலை யுயர்த்து
வண்சிறை மயிற்பரி நடாத்துஞ்
சேவகப்பெருமாளை வேதபுரி வருமிளஞ் சேயைப்
புரக்க வென்றே " —முத்து. பிள்-காப்பு-7

" செக்கச் சிவந்தகழற் செந்திலான் சீரருட்கா
மிக்க கவுமார விசயத்தின்—றக்கதுணை
பாலுறழ் வெண்சேவலோடு பைங்கிளியும் பன்னிருகை
வேலுமயில் வாகன மே. —தண்டபாணி

" நாத மளிக்குங் குரற் புவியி
னகம் போற்றுண்டச் செஞ்சுட்டு
நலத்த பொறிச் சேஞ்சிறைச் சேவல்
நளினக் கரத்திற் பிடித்தோனே "

—போரூர்-பெருங்கழி நெடில்

" அமரர் குழுமிமலர் கொண்டங் கிறைத்தருள
அரிய தருத கோடி யெங்குந் தழைத்தருள
அரியோடயன் முனிவரண்டம் பிழைத்தருள—விடும்வேலா.

**வேல் :**

" ஆடும் பரிவேல் அணிசேவ லெனப்
பாடும் பணியே பணியா யருள்வாய் !

'கொன்றையார்க்குப் பரசொடு கடியசூலம் பினுகவில் படைகள் ; மாலுக்கு சிலை ஆழி சங்கு வாள் கதை படையைந்தாகும்' 'அறுமுகன் உறுபடைவேல்' என்று நிகண்டு உரைத்தவிடத்து முருகனுக்கு ஒரே படை வரைந்த தனிப் பெரும் பெருமை ஆய்வாம். வேல்—செந்தமிழ் சொல். வேலின் வெல் குறுகி ஒலித்தலின் வெல்வது வேல்படையின் காரியமாகிய வெற்றியை வேல் அகத்தமைத்து ஒலித்தலால் இது நாயகப்படை போலும்! பரமன் வேல் அருளிய சமயத்தைக் கந்தம்,

" ஆயதற் பின்னரேவின் மூதண்டத்தைம் பெரும் பூதமு மடுவ
தேய பல்லுயிரு மொருதலை முடிப்ப தேவர்மேல் விடுக்கினு மவர்தம்
மாயிருந் திறலும் வரங்களுஞ்சிந்தி மன்னுயி ருண்ப தேப்படைக்கும்
நாயக மாவதொரு தனிச்சுடர் வேனல்கியே மதலைகைகொடுத்தான்"

—உற்ப. படையெழு. 38

என்றும், 'அரன்பாற் படையரசை வாங்கினன்' எனப் பாம்பன் சுவாமிகள் குமார சுவாமியமும், 'குகன் கையில் தோற்றும் வெற்றி வேலாயுதத்திற்கு மேலாயுதமென்ன வேறில்லையே ; பன்னிருகைக் குகவேள் பூண்ட சத்திப் படைத் தெய்வமே' எனத் தண்டபாணி சுவாமிகள் வேல் அலங்காரமும் ஒத்து ஒலித்தல் காண்க.

வேல் - அடியில் - சத்தி - எஃகம் - ஞாங்கர் - உடம்பிடி ஒருபொருள் தரும் பல சொற்கள். இவற்றுள் வேலும் எஃகமும் ஆயுதப் பொதுப் பெயராகும். பழம் - பொதுப் பெயராயினும் வழக்கில் சிறப்பாக வாழைப்பழத்தைக் குறித்தல் போல வேலென்ற ஆயுதப் பொதுப்பெயர் சிறப்பாக முருகன் படையை உணர்த்திற்று. இதனைப் புலவர் புராணத்தார் 'வேலென்ற பேரொன்றை யாயுதமியாவும் விளங்கு பொதுப்பாலென்று அணியினும் உள்ளன' எனச் சிறப்பித்தலும் சிந்திக்க உரியன. படைக்கலம் எப்பொழுதும் கூர்மையாயிருத்தல் வேண்டும். அக்கூர்மை இதனிடம்

சிறத்தலின் கூர்மை தெரிக்கும் அயில் வேலுக்குப் பெயரா யிற்று.

வெல்வது வேல் எனில் அக்கருவியேயோ வெல்வது? அல்ல. பின் யாது? வீரன் ஏறிய பரியா? கையிற் பிடித்த கலமா? நின்ற நிலமா? உடுத்த உடையா? அன்று; அன்று. பின் என்னை? இவையன்ன துணை யுடையவன் பகைவர் தம் படைவலி கண்டு எங்ஙனம் வெல்வதென ஆய்ந்து முடிவுகட்டும் ஞானமாகும். ஞானம்—அறிவு வெல்லும். பிற துணைபுரியும். வேலுக்கு வடமொழி சத்தி. 'சத்திதான் தடையிலா ஞான' மென்பது சித்தி. இவற்றால் வேல், சத்தி, ஞானம், அறிவு ஒருபடித்தாதல் காண்க. இச்சக்தி விழைவு (இச்சை), செயல் (கிரியை), அறிவு (ஞானம்) என முத்திறப்படும். இவற்றில் அறிவே, ஞானமே, சத்தியாக, வேலாகச் செங்கையிலுள்ளது. இவ்விறையறிவு மாயையினை நிவர்த்தித்து மருளைப் போக்கித் தலைவனை அணுக அருளை அருளும். 'ஞானம் கொண்டே நணுகும் சிவபதம்' என்ற சிவப்பிரகாசர் செம்மொழியும் ஈண்டு நோக்குக.

இவ்வேல் அடியவரை அணுகுங்கால் அறக் கருணை வடிவும், அடியவர் பகைவரை அணுகுங்கால் மறக் கருணை வடிவும் ஏற்று மாயை அகற்றும் தன்மையது.

"ஏயென முருகன் றொட்ட விருதலை படைத்த ஞாங்க
ராயிர கோடி யென்னு மருக்கரிற் றிகழ்ந்து தோன்றித்
தீயழற் சிகழி கான்று சென்றிட வவுணன் கொண்ட
மாயிரு ளுந்வ முற்றும் வல்விரைந் தகன்ற தன்றே. 465

விடம் பிடித்தமலன் செங்கண் வெங்கன லுறுத்திப் பாணி
யிடம்பிடித் திட்ட தீயிற் றோய்த்துமுன் னியற்றி யன்ன
வுடம்பிடித் தெய்வ மீவ்வா றுருகெழ செலவி னேகி
மடம்பிடித் திட்ட வெஞ்சூர் மாமுத றடிந்த தன்றே. 487

புங்கவர் வழுத்திச் சிந்தும் பூமழை யிடையி னேகி
யங்கியின் வடிவ நீங்கி யருளுருக் கொண்டு வான்றோய்
கங்கையிற் படிந்து மீண்டு கடவுள ரிடுக்கண் டீர்த்த
வெங்கடம் பெருமான் செங்கை யெய்தி வீற்றிருந்த தவ்வேல்."

—யுத்த - சூரபன்மன் வதை - 491

'திருவருட் சத்தி வடிவான வேற்படை, எண்ணில் வேதாகமங்கள் பகர்ந்த தெய்வத் துருவமெல்லாமதுதானு விளங்கிடு முண்மையதே' என்றது வேல் அலங்கார அலங்கரிப்பு. வேல் இறைவனது ஞானமாதலால் கச்சியப்பர் தெய்வப் படைக்கலமென மேல் காட்டிய 487 செய்யுளிலும் பிறவிடத்தும் சீர்தூக்கினர்.

"தேயுவி னெடுத்த வண்டத் திறங்களும் பிறங்கு ஞாலத்
தாயிர கோடி யண்டத் தங்கியு மொன்றிற் றென்ன
மீயுயர்ந் தொழுகி யான்றோர் வெருவருந் தோற்றங் கொண்டு
நாயகன் றனது தெய்வப் படைக்கலம் நடந்த தன்றே."

—யுத்த - சூரபன்மன் - 481

வேல் பெறுதல் உணர்ச்சி பெறுதல் என்ற பொருளில் சீவக சிந்தாமணியில் வருதல் வருமாறு :—

" வீழ்ந்து மயில்போல் விசயை கிடந்தாளைத்
தாழ்ந்து பலதட்பந் தாஞ்செய்ய வேல்பெற்று
போழ்ந்தகன்ற கண்ணாள் புலம்பா வெழுந்திருப்பச்
சூழ்ந்துதொழு திறைஞ்சிச் சொன்னா ரவன்றிறமே"

—கனகமாலை - 254

விசயை, மயில்போல வீழ்ந்து கிடந்தவளைத் தாழ்ந்து பல குளிர்ச்சிகளைப் செய்ய உணர்ச்சி பெற்று அரசனுயிரைப் போழ்ந்தகன்ற கண்ணாளெழுந்திருப்ப, கைகுவித்து வணங்கிச் சூழ்ந்து அவன் பிழைத்தபடி கூறினாரென்க என்றது புலவர் நச்சும் நச்சினார்க்கினியர் உரை.

முருகப்பெருமான் தனது இரு துணைவியரோடும் வேலுடனும் மயில்மீதே வதியுங்காலை அப்பெருமானைக் கடவுளாகவும், வேலினையும், இரு துணைவியரையும் முறையே அறிவு, விழைவு, செயலென்னும் மூவகை யாற்றல்களாகவும், மயிலினை அவன் திருவடிக் கீழிருந்து, தனது அறிவு, விழைவு, செயல்களின் வழி நிற்கப்பெற்றுப் பேரின்பம் நுகரும் வீடெய்திய உயிராகவுங் கருதுவதே சமய நூலார் கொள்கையாம். உயிரினது அறிவின்கண் இறைவனது அருள் மன்னுதலின் அறிவுக்கறிவாய் நிற்கும் அவனது அறிவாற்றலைத் தமக்கு நினைவூட்டுவார் 'வேலு

மயிலுந் துணை' என்னும் சொற்றொடரை வாய்ப்பாடாக வழங்குவாராயினர். வேலென்பது இறைவனது அறிவையும் மயிலென்பது அவ்வறிவுக்குட்பட்ட உயிரினறிவையுங் குறிக்கும்' எனத் திருவாளர் கா. சுப்பிரமணியம் பிள்ளை அவர்கள் 'வேலு மயிலும் துணை' எனும் சொல் அடுக்கை மக்கள் எழுதலும் கூறலும் துன்பில் பதம்பெற வழக்கில் அடிபட்டதையும் மிகப் பொருத்தமாக விளக்கி யிருக்கிறார்.

'முத்தி நல்குங் குகவேல் செங்கை வேலை உன்னுதலேமாலின்றிய மனத்தோராயிடினும் வயங்குகதிர் வேலின்றிக் கந்தனைப் பூசை செய்தாற் பயன் வீண்படுமே - வேற்படையைப் பேணிப் பரவும் பெரியார்க்குப் பின்னைப் பிறப்பில்லையே' என ஆமாத்தூரார் அருளியதின் திட்ப நுட்பம் யாது? ஞானம் - அறிவு இன்றி இறைவனை வழிபடுதல் உயிர் அற்ற உடலை ஒக்கும் என்பதே. மற்றும் அறிவு விளக்கமே பண்டை நாளில் மக்களுக்குத் தலையாய குறிக்கோளாக இருந்தமைக்கு வேல் பூசனையே சிறந்த எடுத்துக்காட்டாகும். 'ஞானந்தான் உருவாகிய நாயகன்' என்ற சந்தத்தின் கலிப்பும், 'பழநிப் பதியிற்றிரு, ஞானபூரண சக்தி தரித்தருள் பெருமாளே' என்ற அருணகிரி அருள்வாக்கும் சிந்திக்கும்போது முருகனுக்கும் வேலுக்கும் வேறுபாடின்மை காண்க. இது குறித்தே தமிழர் வேலை வணங்குவதைத் தமக்கு வேலையாகக் கொண்டனர் போலும்!

"தோகைமே லுலவுங் கந்தன் சுடர்க்கரத் திருக்கும் வெற்றி
வாகையே சுமக்கும் வேலை வணங்குவ தேமக்கு வேலை"

—சைவ எல்லப்பர் (செவ்வந்தி)

இனி அமயம் நேர்ந்துழி வேல் ஆற்றிய வேலையின் நுட்பத்தை நுவலும் கட்டுரை எழுத எண்ணி இம்மட்டோடு விரிவஞ்சி முடிப்பாம்.

"கோழிக் கொடியை நின்வேலை மயிலைக் குறித்தவரை
யூழிக் கனலும் அணுகாது." —சிதம்பர சுவாமிகள்

---

# திருமுருகாற்றுப்படை சைவ சித்தாந்த விளக்கமே

வித்துவான் - செ. வேங்கடராம செட்டியார்

(மலர் - 30 ; இதழ் - 7 ; 216-ம் பக்கத் தொடர்ச்சி)

மேல் குன்றுதோறும் முருகன் வேலன்மேல் ஆவேசித்து ஆடிய ஆடலை விளக்கிய புலவர், நானிலத்துள் எஞ்சியுள்ள நிலங்களிலும் அவனிருத்தலை விளக்கினர் இங்கு. காட்டில் இருப்பான் என்பதால் முல்லை நிலத்தும், காவும் துருத்தியும் யாறுங் குளனும் இருப்பான் என்பதால் மருதநிலத்தும், வேறுபல் வைப்பும் என்பதால் இவற்றிற்கு வேருய நெய்தல் நிலத்தும் அவன் இருப்பான் என்பதைப் பெறவைத்தார். ஊர்களில் இயற்கையாக அம் முருகன் தங்கும் இடங்களைக் கூறுவாராய்ச் சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும் மன்றமும் பொதியிலும் கூறியுள்ளார். அவன் எல்லா இடங்களிலும் உள்ளான் என்பதையே இங்ஙனம் வகைப்படுத்திக் கூறியுள்ளார் புலவர் என்பதை யூன்றி நோக்குவோர் உணரலாம். இங்ஙனம் கூறிவந்த புலவர், இறுதியாகக் குறமகள் வழிபாட்டை விளக்கிச் செல்கின்ருர்.

**குறமகள் வழிபாடு :** முருகனை வழிபட விரும்பிய குறமகள், முதற்கண் முருகனுடைய மாண்புமிக்க தலைமையையுடைய கோழிக்கொடியோடு சென்று நீராடினள். பின்னர் அக்கொடியை நட்டு அதில் பொருந்துமாறு பாதுகாவலாக நெய்யும் வெண்சிறுகடுகும் அப்பினள். முருகன் வந்து தங்குவதற்குரிய இடத்தைத் தூய்மை செய்வதற்காக முருகன் மந்திரத்தை வாய்க்குள் சொல்லிக் கொண்டு வணங்கிச் செழுமலர்களைச் சிதறினள். வேறுபட்ட வண்ணத்தினையுடைய இரண்டு ஆடைகளை உள் ஒன்றும் புறமொன்றுமாக உடுத்துக்கொண்டாள். செந்நிறமுடைய நூலைக் கையில் காப்பாகக் கட்டிக்கொண்டாள். வெண்பொரியை எங்கும் சிதறினள். மிக்க வலியையுடைய பெரியகால்களோடுகூடிய செழுமையான ஆட்டுக்

கிடாயின் குருதியோடுகலந்து தூய வெள்ளரிசிசிலவற்றைச் செந்நிறமாக்கிப் பலியாக வைத்தாள். பல பிரப்பங்கூடையில் அளவாக வைக்கும் பண்டங்களை வைத்தாள். சிறிய பசிய மஞ்சளோடு கலந்த நறுமணப் பொருளை எங்கும் தெளித்தாள். பெரியதும் குளிர்ந்ததுமாகிய செவ்வலரிப் பூவால் தொகுத்த மணமிக்க மாலையை ஒத்த அளவினதாக அறுத்து எங்கும் தொங்கும்படி கட்டினாள். பெரிய மலைப் பக்கத்தேயுள்ள ஊர்கள்யாவும் வளமிக்கு வாழ்கவென வாழ்த்தினாள். நறுமணப்புகையை எழுப்பினாள். தன்னாட்டிற்கேற்ப முருகனைப் பொருளாகக்கொண்டு குறிஞ்சிப் பண் பாடினாள். மலையில் வீழ்கின்ற அருவிகளின் ஒலியே இயற்கை வாத்தியங்களாக அவற்றோடு இனிய செயற்கை வாத்தியங்களும் முழங்கச் சிவந்த அழகிய பல மலர்களைத் தூவினாள். பிறகு அச்சம் வரும்படி குருதியொடு கலந்த செந்தினையைப் பரப்பினாள்; பிறகு முருகன் உவக்கும் வாத்தியங்களை வாசிக்கப் பண்ணினாள். உடனே அவள் விரும்பியபடி முருகப்பெருமான், தெய்வம் இல்லையென்று மாறுபட்டுக் கூறுவோர் அஞ்சும்படியாக அவள் எதிரே எல்லோருங் காண வருகின்றான். இவ்வாறு குறமகள், முருகனை வரச்செய்த, அச்சம் பொருந்திய விசாலமான மலைக்கோயிலில் வெறியாடுகளம் ஒலிக்கப்பாடிக் கொம்புகள் பலவற்றையும் சேரவூதிக் கடிய ஓசையையுடைய மணியை ஒலிக்கச் செய்து, கெடாதவலிமையுடைய அவன் யானையினை வாழ்த்தி, இங்ஙனம் வேண்டுவார் வேண்டியபடி விரும்பியவற்றைப் பெற்று வழிபடாநிற்க, மேற்கூறிய அவ்வவ்விடங்களில் தங்குதலும் உரியன். இவ்விடங்களிலெல்லாம் அவன் உறைவன் என்றது யான் அறிந்தபடி கூறியதாகும் என்று புலவர் கூறுகின்றார்.

மேற்கூறிய இடங்களில் மக்கள் பலவகையான நிலையிலிருந்து வழிபடுதலையும் அவ்வழிபாட்டை யேற்றுக்கொண்டு முருகன் அவ்வவ்விடங்களில் தங்குதலையும் சீவன் முத்தராம் பெரும் புலவர், நேரில் கண்டு அக் கண்டவற்றையே கூறுகின்றார். ஆதலின், "ஆண்டாண் டுறைதலும் அறிந்தவாறே" என்றார். பிறரை ஆற்றுப் படுத்துவோர் மேற்கொள்ளவேண்டிய நெறிமுறையும் இதுவேயாகும். தான் சென்றுவந்த வழியினை யன்றிச் செல்லாது கேள்வி

யாலறிந்தவற்றை வழியனுப்பப்படுவோர்க்குக் கூறுவது பொருந்தாது. அவை உண்மைக்கு மாறுபட்டனவாகவும் இருத்தல் கூடுமாகலின் என்க. மேல் குன்றுதோறாடலில் வேலன் வழிபாட்டைக்கூறி, இப்பகுதியில் குறமகள் வழிபாட்டைச் சிறப்பு வகையில் செப்பியது, இறைவனுடைய மூவகை நிலைகளில் உயிர்க்குயிராதல் தன்மையால் உலகமோடுடனுகும் நிலையை யுணர்ந்து வழிபடு நிலையை விளக்க வேண்டியேயாம்.

வீடுபெறுதற்குரிய மக்களுள் குறவர் இழிந்த பிறப்பினர் என்பது முன்னமே அறிந்தது; அக்குலத்துக் குறமகளுக்கு முருகன் உயிர்க்குயிராய் இருப்பதை விளக்கினுல் ஏனையோர் உயிர்க்கு உயிராக முருகன் இருப்பது கூருமலே பெறப்படும். குறமகள், தன் உயிர்க்குயிராக முருகன் உடனிருக்கின்ருன் என்பதை நன்குணர்ந்து அவனையே உயிர்நாயகனுகக் கொண்டு வழிபடுகின்ருள். உலகத்து ஆடவரும், இறைவனை யடைய எண்ணி வழிபடுங்கால் தம்மைப் பெண்பாலாகக் கருதி இறைவனைத் தலைவனுகக் கொண்டு வழிபடு முறையைத் தமிழ் நூல்களில் பரக்கக் காணலாம். இயற்கையாகவே பெண்ணுகப் பிறந்த இக் குறமகள் முருகனைத் தலைவனுகக் கொண்டு வழிபடுதல் காலப்பொருத்தமாதல் காண்க. முன்பு குறமகளாகிய வள்ளி இவ்வாறு வழிபட்டு என்றும் முருகனுடனே யிருக்கும் பேறு பெற்றுளாள் என்பதும் ஆவிநன்குடியில் அவ் வள்ளியோடிருந்தே முருகன் உலகமோடுடனும் நிலையை யுணர்த்துகின்ருன் என்பதும் ஈண்டு நினைத்தற்குரியவாகும்.

இக்குறமகள், முருகனையே தலைவனுகக் கொண்டவளாதலின் தனக்கென்று ஒன்றும் வேண்டாதவளாயினுள். உலகத்துயிர்க்கெல்லாம் தானே பிரதிநிதியாக நின்று வழிபடுகின்ருள். இவள் வழிபாடு தன்னலங்கருதாது என்பதை: “ நளிமலைச் சிலம்பின் நன்னகர் வாழ்த்தி ” என்ற தொடரால் அறியலாம். உலகத்துப் பெரும்பாலார், கடவுளை வழிபடுங்கால், தாம் வாழவேண்டியே வழிபடுவர். இவள், அங்ஙனமின்றி நல்ல நகரிலுள்ளாரை வாழ்த்துகின்ருள். உயிராகிய தான் வாழ்த்தினுல் ஏனையுயிர்களை வாழவைக்க வியலாது. தன்னுயிர்க்குயிராக விளங்கும் இறைவனே வாழ்விக்க வேண்டும். இது கருதியே பொது

நிலையில் நின்று வாழ்த்தாது, "தன்னுயிர்க்குயிர் முருகனே" என நீடு நினைந்து வழிபடும் சிறப்பான வழிபாட்டு நிலையில் நின்று வாழ்த்துகின்றாள். இந்நிலையில், உயிராகிய தான் வாழ்த்தினால் அவள் உயிர்க்குயிராகிய முருகன் வாழ்த்துவதே யாகும்' என்பதை நன்குணர்ந்து இங்ஙனம் வாழ்த்துகின்றாள். குறமகள், ஆற்றல்மிக்க அன்பால் முருகன் தன் முன்வரல்வேண்டுமென நினைந்து வழிபடுகின்றாள். அவள் நினைந்ததை யுடனிருந்து அறிந்த முருகன், அப்பொழுதே அவள் முன் வருகின்றான். இதுவே, குறமகள் உயிர்க்குயிராய் முருகன் உடனிருக்கும் தன்மையை யுணர்ந்து வழிபட்டாள் என்பதற்குச் சிறந்த சான்றாகும். முருகன், குறமகள் விரும்பிய வண்ணம் வந்து நின்றதைக் கண்டு, கடவுள் இல்லை யென்று தருக்கிக் கூறினவர்கள் எல்லாம் அஞ்சி நடுங்குகின்றனர். முருகன், தானே குறமகளின் உயிர்க்கு உயிராயிருத்தலை இவ்வாறு வந்து நின்று உணர்த்துகின்றான்.

திருவேரகத்தில் அந்தணர் வழிபாட்டிலும், வேலன் வெறியாட்டிலும் முருகன் நேரே வந்ததாகக் கூறாது, இங்குக் குறமகள் வழிபாட்டில் வந்ததாகக் கூறியது, முருகன், உயிரோடுடனும் தன்மையை விளக்கும் பொருட்டேயாம். சீவன் முத்தராம் பெரும்புலவர், இங்ஙனம் முருகன் மூவகை நிலையில் உறையும் இடங்களையும் அம் மூவகைநிலையில் வைத்து அடியார் வழிபடும் இடங்களையும் அவைபோன்ற பிற இடங்களையும் வீடு விரும்பிய புலவர்க்கு விளங்கக்கூறினார். இனி, அவனைக் கண்டவிடத்துத் துதிக்கும் முறையை விவரிக்கின்றார். (தொடரும்)

---

## ஐயவினா

திருவாசகத்தில் கோயிற் றிருப்பதிகத்தில் "திணிந்த தோரிருளில் தூவெளியே" என்று சிவபெருமானை மாணிக்கவாசகர் பிரார்த்திக்கிறார்கள். சிவபுராணத்தில் "நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதன்" என்று கூறுகிறார்கள். "மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம் மின்னொளி கொண்ட பொன்னொளி திகழ" விளங்கும் தேசுடைய இடத்தில், திணிந்ததோரிருளும் நள்ளிருளும் பொருந்தி நிற்கும் தன்மை எவ்விதம்? அறிஞர்கள் சித்தாந்தத்தின் மூலம் விளக்கம் எழுதவும்.

சித்தாந்தத்திற்குக் கட்டுரை எழுதவும், சமாஜ வரவு செலவு கணக்குகளைக் கவனிக்கவும் தயங்காமல் செய்துவருகிறார்கள். அவர்கள் விரைவில் உடல் நலம் பெற்று, சமாஜப்பணியை இன்னும் பன்னாள் பேருக்கத்துடன் நடத்த வேண்டுமென்று எல்லாம் வல்ல சிவபெருமானைச் சைவப் பெருமக்களனைவரும் பிரார்த்திக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.—காரியதரிசி.

## அறிக்கை

சைவ சித்தாந்த மகா சமாஜ அங்கத்தினர் பலரிடமிருந்து வந்த கடிதங்களில் 'சித்தாந்தம்' சரிவர அனுப்பப்படவில்லையென்றும், அலுவலகத்தில் காரியங்கள் உடனே கவனிக்கப்படவில்லையென்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது. அடிக்கடி செயலாளர்கள் மாற்றப்பட இருந்தமையின் காரணமாகவும், சந்தாநேயர்கள் அவ்வப்போதிருந்த செயலாளர்களுக்கு நேரே எழுதாமை காரணத்தாலும் அவ்வித தாமதங்கள் ஏற்பட்டமைக்கு வருத்தத்தை தெரிவித்துக் கொள்வதோடு, இப்போது சமாஜ அலுவலகம் 'கனக விலாஸ்', 14, வாரன் ரோட், திருமயிலை, சென்னை-4 என்ற இடத்தில் அமைக்கப்பட்டுள்ளதால் அந்த விலாசத்திற்கே சமாஜ விஷயமான எல்லாக் கடிதங்களும் எழுதப்பட வேண்டுமென்று தெரிவித்துக் கொள்கிறேன்.—காரியதரிசி.

## ஐய வினாவிற்கு விடை

'நிறங்கள் ஓர் ஐந்துடையாய்' என்னும் திருவாசகச் சிவபுராணச் சொற்றொடரின்கண், இறைவன் நிலம் நீர் தீ வளி விசும்பு என்னும் ஐம்பூதங்களினும் இரண்டறக்கலந்துநின்று இயக்குதலின், அவற்றிற்கு முறையே உரிய பொன்மை வெண்மை செம்மை கருமை புகைமை என்னும் ஐவகை நிறங்கள் இறைவனுக்கும் உரியனபோல வைத்துக் கூறப்பட்டன. இனி, சுத்த தத்துவங்கள் ஐந்தினும் இறைவன் விளங்கி நிற்கும் இயல்பு பற்றி, ஐவகை வடிவங்களை உடையவனாகக் கூறப்பட்டான் எனவும் கொள்ளலாம். இக்கருத்துக்களின் விளக்கத்தினை, ஆசிரியர் மறைமலை அடிகளின் திருவாசக விரிவுரையிற் கண்டுகொள்க.—முருகவேள்.

## வாரவழிபாடு

சைவ சித்தாந்த மகா சமாஜ உதவித்தலைவர் திருவாளர் ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்களால் துவக்கப்பட்டு, 14—1—57 முதல் திருமயிலைக் கபாலீச்சுரத்தில் பிரதி சோமவாரம் மாலை 7-30 மணிக்கு வாரவழிபாடு நடத்தப்படுகிறது. முதல்நாள் அற

மிலயப் பாதுகாப்பு ஆணையாளர் திரு. உத்தண்டராமப் பிள்ளை ஐ. ஏ. எஸ். அவர்கள் உடனிருந்து நடத்திவைத்தார்கள்.

இதன் நோக்கம், கூட்டுப் பிரார்த்தனை மூலம் உலக க்ஷேமத்தையும் சமயவளர்ச்சியையும் வேண்டுவதோடு, மக்களுக்கு வழிபாடு செய்யும் பயிற்சியை அளித்து வழிபடும் முறையைக் கற்பித்தலுமாகும். முறையே இது எட்டு அங்கங்கள் கொண்டுள்ளது. 1. தோத்திரம். 2. 'சிவபுராண' பாராயணம். 3. சமயபோதனை. 4. மௌன தியானம். 5. வாழ்த்து. 6. மூர்த்தி வழிபாடு. 7. மங்கள வாழ்த்து. 8. பிரசாதம் வழங்கல்.

இதே முறையில் ஆங்காங்கு சைவப் பெருமக்கள் ஒன்றுகூடி வாரத்திற்கொருமுறை ஒரு மணிநேரம் 'வாரவழிபாடு' செய்தல் சிவாலயப் பாதுகாவலுக்கும், சைவசமய வளர்ச்சிக்கும், உலகமக்கள் க்ஷேமத்திற்கும் இன்றியமையாத சாதகமாகும். இவ்விதம் செய்ய விரும்பும் குழுவினர்கள் மேலே காட்டியுள்ள அங்கங்களின் விவரங்களைத் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்களிடமிருந்தாகிலும், சமாஜச் செயலாளரிடமிருந்தாகிலும் தெரிந்துகொள்ளலாம். சமாஜச் செயலாளர் தற்போது மூன்றாவது அங்கமாகிய சமயபோதனையை கபாலீச்சுரர் வாரவழிபாட்டுச் சங்கத்தில் செய்துவருகின்றார்கள்.

**அரியலூர் மணிவாசக மன்றம் 14-ஆம் ஆண்டு நிறைவுவிழா**

இவ்விழாவும் இதன் அங்கமாக மன்ற முதல் வெளியீடாகிய திரிசிரபுரம் 'பெருஞ்சொல் விளக்கனார்' 'முதுபெரும் புலவர்' திரு. அ. மு. சரவண முதலியார் அவர்களால் எழுதப்பட்ட 'அழுது அடியடைந்த அன்பர்' நூல் வெளியீட்டு விழாவும் 21-7-57-ம்தேதி ஞாயிற்றுக்கிழமை அரியலூர் டிஸ்ட்ரிக்ட் முன்சீப் உயர்திரு. எஸ். ஆர். கோவிந்தராஜலு நாயுடு, பி.ஏ., பி.எல்., அவர்கள் திறப்புரை நிகழ்த்தவும் புதுக்கோட்டை சப்ஜட்ஜ் உயர்திரு. எஸ். மகராஜ பிள்ளை, எம்.ஏ., பி.எல். அவர்கள் தலைமை தாங்கவும் நடைபெற்றது. சென்னை திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், எம்.ஏ., பி.எல்., எம்.ஓ.எல். அவர்களும், திரு. அ. ச. ஞானசம்பந்தம், எம்.ஏ. அவர்களும் சொற்பொழிவாற்றினார்கள். பலர் பாராட்டிப் பேசினார்கள். திரு. வி. பொ. சிங்காரவேல் பிள்ளை திருமுறை ஓதினார்கள். திரு. பெருஞ்சொல்விளக்கனார் அவர்கள் நன்றிகூற விழா நிறைவெய்தியது.

Printed at the Sadhu Press, 15, Ganapathi Mudali Street, Royapettah by D.Mangayarkarasi and V.K. Punithavathi Edited by C. M. Ramachandran Chettiar, B..A., B.L., and Published by S.Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4